For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

பிப்ரவரி 2021 • இதழ் 9





இரத்த சாட்சிகளின் இரத்தமே திருச்சபையின் வித்து.

**ஆசிரியர் சுவடு**

கிறிஸ்துவுக்குள் அன்பார்ந்த கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கையின் வாசகர்கள், எழுத்தாளர்கள் மற்றும் விளம்பரதாரர்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்கள்.

"கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும், செத்ததேயாகில் மிகுந்த பலனைக்கொடுக்கும்" (யோவான் 12:24). "இரத்த சாட்சிகளின் இரத்தம் திருச்சபையின் வித்து" என்றார் தெர்த்துளியன். இரத்த சாட்சிகளின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி சுத்திகரிக்கும் இயேசுவின் இரத்தத்திற்கு சாட்சியாயிருக்கிறது. அதுவே திருச்சபைகள் உருவாக இன்றும் காரணமாயிருக்கிறது. சாட்சியுள்ள வாழ்க்கை வாழ்பவர்கள் தான் இரத்தசாட்சியாக மரிக்கமுடியும். இன்று இரத்தம் சிந்தி மரித்த இயேசுவுக்கு சாட்சியாக வாழும் மற்றும் ஊழியம் செய்யும் விசுவாசிகள் மற்றும் ஊழியர்களை காண்பது அரிதாயிருக்கிறது. இந்த மாதம் கிறிஸ்துவுக்காக இரத்த சாட்சியாக மரித்தவர்களின் வரலாறு அடங்கிய பத்திரிக்கை உங்கள் கைகளில் இருக்கிறது. இரத்த சாட்சிகளின் வரலாறு நம் கிறிஸ்தவ வாழ்விற்கும் ஊழியத்திற்கும் மிகவும் பயனுள்ளதாக அமையும்.

மார்ச் மாத இதழின் கருப்பொருளாக "சமூகப் பணியில் கிறிஸ்தவர்களின் பங்களிப்பின் வரவாறு" என்று தெரிவு செய்யப்பட்டிருக்கிறது. கட்டுரை ஆசிரியர்கள் நம் நாட்டில் கிறிஸ்தவ மிஷனரிகள் மற்றும் சங்கங்கள் ஆற்றிய மற்றும் ஆற்றிக்கொண்டிருக்கிற சமூகப்பணி பற்றிய வரலாற்று கட்டுரையை பிப்ரவரி 15ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்" பத்திரிக்கையை உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்தி இவ்வூழியத்தை தாங்கும்படியாக அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

*மன்னா செல்வகுமார்*


கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**
**வடிவமைப்பு : சுஜித்.S**





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218
04633 290401

# இரத்த சாட்சிகள்

பிலிப் கே மல்லி கோத்தகிரி,
நீலகிரி

ஒரு வரலாற்று கண்ணோட்டம் 'இரத்த சாட்சிகள்' என்ற சொல்லாட்சி திருச்சபையின் வரலாற்றில் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள செம்பொருளாக மாறியுள்ளதை நாம் அறிவோம். சாட்சியாக இருத்தல் என்ற எளிய பொருளையே கிரேக்க வேர்ச்சொல், ஆங்கிலத்தில் புழங்கி வரும் வாயிலாக "மார்ட்டையர்" என்கிற சொல்லுக்கு வழங்கியது. திருச்சபையின் மரபுகளில் இதன் செல்வாக்கும் மகத்தானதாக வளரத் தலைப்பட்டது. புதிய ஏற்பாட்டில், முதன் முதலாக அப் 22:20 இல், ஸ்தேவானுடைய இரத்தம் சிந்துதல், சாட்சியாக ஏற்றுக்கொள்ளப்படுவதைக் காண்கிறோம். வெளி 2:13-இல் குறிப்பிடப்படும் அந்திப்பா என்பவனும் கொல்லப்பட்டதனிமித்தம் சாட்சியாக அறிவிக்கப்படுவதைக் காண்கிறோம். பரிசுத்தவான்களின் இரத்தம் சிந்தப்படுதலையும், இயேசுவினுடைய சாட்சிகளின் இரத்தமும் வெளி 17:6 ஆம் வசனத்தில் மேற்கோள் காட்டப்படுகின்றன சாட்சிகள் அல்லது சான்றாளர்கள் என்ற அடிப்படையான கிரேக்க பதம் இவ்வாறு தான் ஒரு இறையியல் மெருகைப் பெற்றது.

ஏறத்தாழ கி. பி. நான்காம் நூற்றாண்டு வரையிலும் நீடித்த, ஆதித் திருச்சபை விசுவாசிகளுக்கு எதிராக அரங்கேற்றப் பட்ட வன்கொடுமை நிகழ்வுகள் இரத்த சாட்சிகளின் வாழ்க்கைக்கு, ஒரு புதிய மேனிலையான இடத்தை உருவாக்கிக் கொடுத்தன. இதன் பின்னர், கி.பி. 1071 முதல் கி.பி. 1270 வரையிலும் கட்டவிழ்த்து விடப்பட்ட சமயப் பூசல்கள், சிலுவைப் போர்கள் என அழைக்கப்பட்டு, ஆயிரக்கணக்கான கிறிஸ்தவர்கள் கொன்று குவிக்கப்பட்டனர் மேற்கு ஆசியா மற்றும் துருக்கி தேசங்களில், கிறிஸ்தவர்கள் என்ற ஒரே காரணத்துக்காக மட்டுமே, அவர்களுக்கு எதிராக இருந்த இன்னொரு சமயத்தார் இந்த கொடுமைகளுக்கு இரத்த சாயம் பூசினர் கிறிஸ்தவர்கள் தான் இந்த போர்களுக்குக் காரணமாக இருந்தனர் என்ற ஒரு வக்கிரமான கோட்பாட்டை நிறுவ 'சிலுவைப் போர்கள்' என்ற பெயர் எழும்பிற்று. இது எப்படியாயினும், அந்நாட்களின் ரோமன் கத்தோலிக்க திருச்சபை இழந்து போன விசிவாசிகள் எல்லோருமே இரத்த சாட்சிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டனர், அவர்களுக்காக நிறைவேற்றப்பட்ட சடங்குகள் புதிய மரபுகளை உருவாக்கின. ஆனால், இவற்றினுக்கு, பரிசுத்த வேதாகம ஆதாரங்கள் ஒன்றும் இல்லையாதலால் அவை அவசியமற்றவை

மேற்கண்ட காலங்களுக்குப் பின்னர் திருச்சபை தனது போதனைகளில் பிறழ்ந்து சென்றபோது, இதனைக் கண்டித்த ஜான் ஹஸ் (1369-1415) கழுவிலேற்றப்பட்டு கொல்லப்பட்டார், அவருடைய முன்னோடியான ஜான் விக்ளிப் (1320-1381) பாமரர்களுக்குப் பரிசுத்த வேதாகமத்தை மொழிபெயர்த்துக் கொடுத்தார். அவர் இரத்த சாட்சியாக மரிக்கவில்லையாயினும், அவர் மேல் திருச்சபையின் அதிகாரவர்க்கம் கொண்டிருந்த காழ்ப்புணர்ச்சி வித்தியாசமாக இருந்தது. விக்ளிப்பின் அடக்கத்திற்கு லெ காலம் பின்னர். அவருடைய எலும்புகள் அவர் கல்லறையிலிருந்து தோண்டியெடுக்கப்பட்டு சிதறிடிக்கப்பட்டன கிறிஸ்தவர்களல்லாதவர்கள் மட்டுமல்ல, திருச்சபையே ஹஸ் போன்றவர்களை இரத்த சாட்சியாக ஒப்புவித்ததையும் நாம் பதிவு செய்ய வேண்டும். நவீன காலங்களில், பொதுவுடைமை இயக்கம் தீவிரமடைந்திருந்த நாட்களிலும் அநேக விசுவாசிகள் இரத்த சாட்சிகளாக மடிந்தனர் என்று பதிவு செய்யப்பட்டிருக்கிறதையும் நாம் அறிவோம். தென்னிந்திய திருச்சபையின் வரலாற்றியலாளர்களுள் ஒருவரான, ராஜையா பால் அவர்கள் தம்முடைய வெளியீடு (1967) ஒன்றில், அரசியல் நிகழ்வுகளின் விளைவாக இரத்த சாட்சிகளாக மடிந்தவர்கள் என்று பத்து பேரைக் குறிப்பிடுகிறார் 1857-ஆம் ஆண்டு ஆங்கிலேயருக்கு எதிராக நடந்த கிளர்ச்சிகளில், இப்பத்து பேரும் கிறிஸ்தவர்கள் என்பதற்காக, வட இந்தியாவில் கிளர்ச்சியாளர்களால் கொல்லப்பட்டனர் தென்னிந்திய வரலாற்றை எடுத்துக் கொண்டால், மராத்திய படையெடுப்புகள் மற்றும் திப்பு சுல்தான் ஆங்கிலேயருக்கு எதிராக நடத்தின் போர்கள் ஆகியவற்றில் கிறிஸ்தவர்கள் என்பதற்காகவே கொல்லப்பட்ட நூற்றுக்கணக்கான பேரும் உண்டு, வரலாற்று ஆவணங்களில் பதிவு செய்யப்பட்டுள்ள இன்னும் அநேகரைக் குறித்தும் நாம் அறிவோம், இவ்வெழுத்தாக்கத்தை இறுதியாக்குவதற்கு முன்னர், இரத்த சாட்சியாக ஆதிவரலாற்றில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இன்றைக்கு மறக்கப்பட்டுப்போயுள்ள ஒருவரைப் குறிப்பிட விரும்புகிறேன். மேற்கண்ட பதிவுக்கு உரியவரின் பெயர், வாலன்டைன் இன்றைக்கு இந்த பெயரில் நடந்துவரும் களியாட்டங்களுக்கு திருச்சபை பொறுப்பல்ல, வாலன்டைன் என்ற இரத்த சாட்சியானவரின் நினைவு கூறுதல் நாளாக பிப்ரவரி 14. ஆதி திருச்சபையில் அனுசரிக்கப்பட்டு வந்தது வாலன்டைன் என்ற இந்த குருவானவர். தாம் கிறிஸ்துவுக்குள் கொண்டு வந்த அநேக விசுவாசிகளுக்கு ஒரு பெரிய புகலிடமாக இருந்து வந்தார் இரண்டாம் கிளாடியஸ் என்ற ரோமப் பேரரசனின் ஆளுகையில் கிறிஸ்துவர்கள் துன்புறுத்தப்பட்டு வந்த உச்ச கட்டத்தில், இவர் தம்முடைய நெருங்கிய நண்பராக இருந்த அஸ்டேரியஸ் என்ற மாஜிஸ்ட்ரேட் உதவியுடன் அநேக கிறிஸ்துவ விசுவாசிகளை கொடிய சிறை தண்டனைகளிலிருந்து விடுவித்து காப்பாற்றினார் என்று, பிலாசிடஸ் என்ற ரோமானிய ஆளுநரால் குற்றஞ்சாட்டப்பட்டார். இதற்காக,



இவர்கள் இருவரும் ரோம் நகரிலிருந்து 90 கி.மீ தொலைவிலிருந்த ஒரு தண்டனை கிடங்கில் அடைக்கப்பட்டனர் இவர்கள் இருவரும் பெருத்த மரக்கம்பங்களுக்கு இடையே கட்டி வைத்து அடித்துக் கொல்லப்பட்டனர். இது நிகழ்ந்த ஆண்டு கி.பி.73 வாலன்டைன் அவர்களின் பரிசுத்த நினைவுக்காக ஒரு பேராலயம் கி பி 350-ஆம் ஆண்டில் எழுப்பப்பட்டது. வாலன்டைன் இரத்த சாட்சியாக இறந்த பிப்ரவரி 14 ஆம் நாள் கிறிஸ்தவ நட்பின் இலக்கணத்தைக் கொண்டாடும் நாளாகப் பின்பற்றப்பட்டது(யோ.15 13) இன்றைக்கு இது அடைந்துள்ள உருமாற்றம் வேறு.

# சென்னையில் கல்லெறியப்பட்டு உயிர் பிரிந்தது !

ரோடா அலெக்ஸ்,
சென்னை

சென்னையின் மயிலாப்பூர் பகுதியில் பிரபல Music Academy எதிரில் உள்ள சி ஸ் ஐ. நல் மேய்ப்பர் ஆலயம் 1871 ஆண்டு ஒரு எளிய ஜெப அறையாக ஆரம்பமாயிற்று. இன்று அது இந்தியாவில் வேறெங்கும் காண இயலாத கட்டிடக்கலையோடு அழகாய் நிற்கும் வெள்ளை நிற ஆலயம். இவ்வாலயத்தில் உள்ள ஞானஸ்தான தொட்டியின் மேல் இருக்கும் ஆங்கில எழுத்து கீழ்வரும் செய்தியை தெரிவிக்கிறது:-

கடவுளுடைய மகிமைக்கும் மறைத்திரு யோசேப்பு ஞானவொளிவு அவரின் அன்பான ஞாபகத்திற்கும், மெட்ராஸில் செய்த பணிகளுக்கும் : ஏப்ரல் 1893ல் இருந்து ஏப்ரல் 1897 வரை.

இதே போல நாகப்பட்டினம் CSI செயின்ட் பீட்டர்ஸ் ஆலயத்தின் பீடத்தில் ஆங்கில வாசகம் உள்ளதாக கூறப்படுகிறது :-
கடவுளுடைய மகிமைக்கும் அவருடைய பணிவிடைக்காரனாகிய போதகர் யோசேப்பு ஞானவொளியின் ஞாபகமாகவும். 29 ஏப்ரல் 1897 RIP.

யார் இந்த யோசேப்பு ஞானவொளிவு?

இவர் கிறிஸ்துவின் ஊழியராக பணியின்போது சென்னையில் இரத்தசாட்சியாக மரித்தவர். எல்லாராலும் கவுரமாக நடத்தப்பட்டும், அனைவரின் அன்பிற்கு பாத்திரமாகவும் வைராக்கியமான இந்திய நாட்டு போதகராக கருதப்பட்டார். ஏப்ரல் மாதம் 4ஆவது தேதி, 1897ஆம் ஆண்டு, இவர் தன்னுடைய குருசேகரமான (தற்போதைய CSI தூய பவுல் ஆலயம்,) வேப்பேரிக்கு சுல்லைவன் கார்டன், மையிலாப்பூரிலிருந்து (Theological college in Madras) மிதிவண்டியில் திரும்பிக்கொண்டிருக்கும் போது சுமார் 8.30 மணியளவில் ... யாரோ வீசிய கல் அவர் தலையில் பலத்த காயம் ஏற்படுத்தியது. அந்த சம்பவத்திற்குச் சற்று முன் அவர் தெரு பிரசங்கம் செய்துக்கொண்டிருந்தார் என்றும் கூறப்படுகிறது. சுவிசேஷம் செய்யும் போதகர்கள் அக்காலங்களில் அவ்வப்போது கல்லெறிந்து கலைக்கப்படுவார்கள் என்று மிசனரிகள் குறிப்பிடுகின்றனர்.

தலையில் காயம் ஆழமாயிருந்தும் அவர் ஒரு வழியாக வீடு வந்து சேர்ந்தார். அந்த நாட்கள் லெந்து நாட்கள் ஆகையால் பெரிய வெள்ளி மற்றும் உயிர்த்தெழுந்த திருநாள் வழிபாடுகளையும் காயத்தோடுக்கூட நடத்தி முடித்திருக்கிறார். காயத்தின் வழியாக டெட்டனஸ் வியாதி தொற்றிக்கொள்ளவே மருத்துவமனை சென்றும் பயனின்றி தனது 51ஆவது வயதில் மன்னுயிர் துறந்தார். அச்சமயத்தில் அவரது மூத்த மகன் மட்டுமே உத்யோகம் செய்தும், இன்னும் 2 மகன்கள் படித்து கொண்டும், 5 மகள்களும் பராமரிக்க வேண்டிய வண்ணம் இருந்தனர்.

மறைத்திரு யோசேப்பு ஞானவொளிவு கடைசியாக எழுதிய கடிதம் - மறை கல்லூரியில் பயிலும் நம்நாட்டு மாணவர்களின் பெண் பிள்ளைகளுக்கு பள்ளி ஒன்று கேட்டுதான் - அதுவரை பெண்களுக்கான பள்ளி இல்லாதிருந்தது. அவர் கோரிக்கைக்கு பதில் அந்த வருடம் ஜூலை மாதத்திலேயே கிடைத்தது - பெண்களுக்கான பள்ளி ஒன்றும், விடுதி ஒன்றும் தொடங்கப்பட்டது. மரித்தும் ஊழியம் செய்தார் யோசேப்பு ஞானவொளிவு என்று சொன்னால் மிகையாகாது.

தூய பவுல் ஆலய மக்கள் எவ்வாறு இத்துன்ப நிகழ்ச்சியை எதிர்கொண்டனர் என்று தெரியவில்லை. பின்னாட்களில் ஆயரின் மூன்றாம் தலைமுறையினரும் ஆயர் பணி செய்தார்கள் என்ற குறிப்புகள் உள்ளன.

ஆயர் யோசேப்பு ஞானவொளிவு தமிழ்நாடு நாசரேத் ஊரில் 1846ஆம் வருடம் பிறந்தார். சாயர்புரத்தில் கல்வி பின்னர் 1870ஆம் ஆண்டு மெட்ராஸ் சுல்லைவன் கார்டெனில் ய் பு தேர்வில் தேர்ச்சி அடைந்து 1872 சாயர்புரம் செமினரி மாஸ்டராக பணியமர்த்தப்பட்டார். பின்னர் ராமநாதபுரத்தில் ரெவ்.பில்லிங்கிடம் பணிசெய்யும்போது ஆயர் பட்டம் பெற்றார் .

SPG மிஷன்னின் முதல் இந்திய தனிப்பொருப்புடன் பணி செய்த ஆயர் இவரே. இப்படியாக 1892ஆம் ஆண்டு அவர் மெட்ராஸில் அதிக கிறிஸ்துவர்கள் வாழ்ந்து வழிபட்டு வந்த பகுதியான வேப்பேரியில் தூய பவுல் ஆலய ஆயராக பொறுப்பேற்றார். தன் ஆலயத்திற்காகவும் சுற்றிலும் உள்ள மக்களுக்காகவும் நற்பணி செய்துள்ளார். அவர் அன்பின் ஊற்றாகவும் தன் பிரசங்கங்களை நடைமுறைக்கு ஏற்றவாறு சிறப்பாக பொழிந்தார் என்று பாதர் பென்சன் 1891ல் Cowley Evangelist பத்திரிக்கையில் குறிப்பிட்டுள்ளார். நம் முன்னோர்களின் தியாகம் நமக்கு நல்ல உத்வேகமாக அமையட்டும். சென்னையில் உள்ள தேவாலயத்தில் இவ்வாறு வாசகம் உள்ளதென்று ஆவனப்படுத்திய வரலாற்று ஆர்வலர் மற்றும் எழுத்தாளர் நிவேதித்தா லூயிஸ் அவர்களுக்கு நன்றி.

# அருட்திரு அறிவர் பெர்னார்டு ஸிமிட்

1787 - 1857

REV. Dr. BERNHARD SCHMID

அருட்திரு பேராசிரியர் மா. தேவராஜ்
கூடலூர், நீலகிரி

அருட்பணியாளர், கல்வியாளர், மானிடவியலாளர், மொழியியலாளர், தாவரவியல் ஆய்வாளர், நிர்வாகவியல் நிபுணர் என்ற பன்முகம் கொண்ட அருள்திரு. அறிவர். பெர்னார்டு ஸிமிட் Rev. Dr. BERNHARD SCHMID அவர்கள் 1788 ஆம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்தார். அவர் தம் ஆரம்ப கல்வி, மற்றும் உயர் கல்வியை முடித்து, இறையியல் கல்வியையும் சிறப்புடன் முடித்து, அருட்பணிக்காக அருட்பொழிவுப் பெற்று, இவரது சகோதரர் (அண்ணன்) தியோக்கர் ஸ்மிட் அவர்களுடன் இணையாக திருச்சபை அருட்பணி சங்கத்தில் (Church Mission Society -CMS) இணைந்து அருட்பணியாற்ற அருள்திரு டிக்கோர் அவர்களுடன் இந்தியாவுக்கு வந்துச் சேர்ந்தனர். குறிப்பாக வங்கத்திற்கு செல்ல வேண்டி அந்நாட்களின் கடினமான கப்பல் பயணத்தின் இறுதியில் சென்னை வந்தடைந்தார். ஆனால் சி.எம்.எஸ சங்கம் இவரைச் சென்னையில் அருள்திரு சி. டி. இ. ரேனியஸ் அவர்களுக்கு உதவியாகவும், அருள்திரு தியோக்கர் ஸிமிட் அவர்களை வங்கத்திலுள்ள கல்கத்தாவுக்கு அனுப்பியது.

சிஎம்எஸ் சங்கம் திருநெல்வேலியில் 1820 ஆம் ஆண்டு தமது அருட்பணியைத் தொடங்கினதினால் திருநெல்வேலி அப்போஸ்தலர் என்றப் பெருமைக்குறிய அருட்பணியாளர் அருள்திரு சி. டி. இ. ரேனியஸ் அவர்கள் சென்னையிலிருந்து திருநெல்வேலிக்கு 1820 ஆம் ஆண்டு ஜீலை மாதத்திலும், அவருடைய வேண்டுகோளுக்கு இணங்க இவரை திருநெல்வேலிக்கு அனுப்ப சி எம் எஸ் சங்கத்தாரால் முடிவுச் செய்யப்பட்டது அதன்படி 1820 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 20 ஆம் தேதி அருட்திரு. அறிவர். பெர்னார்டு ஸிமிட் திருநெல்வேலி பாளையங்கோட்டைக்கு வந்துச் சேர்ந்தார்.

அருள்திரு ஸ்மிட் அவர்கள் நல்ல கல்வியியலாளர், இவர் தமிழ் மொழியை கசடற கற்றுத் தேறியிருந்தார், தமிழில் பேசி உரையாட மட்டுமல்லாது, எழுதிப்படிக்கவும், பிறருக்கு கற்பிக்கவும் தமிழில் புலமைப் பெற்றிருந்தார்.

ஸிமிட் சகோதரர்கள் சென்னைக்கு 1815/16 வந்து சேர்ந்ததுமே அருள்திரு ரேனியஸ் அவர்கள் சென்னையில் சி.எம் எஸ் சங்கத்தின் இரண்டாம் பள்ளிக் கூடத்தை நிறுவி அதற்கு 'இங்கிளீஸ் பள்ளிக்கூடம்' (English School) என்று அறியப் பட்ட ஆங்கில வழி பள்ளிக்கூடத்தைத் தொடங்கினார். ஸிமிட் திருநெல்வேலியில் அருள்திரு ரேனியஸ் அவர்களுக்கு உதவினர்.

அருள்திரு சி.டி.இ. ரேனியஸ் அவர்கள் 1820 ஆம் ஆண்டு ஜீலை மாதத்தில் பாளையங்கோட்டைக்குச் சென்றார், அருள்திரு ஸிமிட் அவர்கள் 1820 ஆம் ஆண்டு அக்டோபர் 20 ஆம் தேதியில் பாளையங்கோட்டையை அடைந்தார்.

புதிதாக தொடங்கப்பட்ட பாளையங்கோட்டை அருட்பணி தளத்தில் திருச்சபை நாட்டுதல் மற்றும் பிரசங்கிப்பது உள்ளிட்ட நிர்வாகங்களை அருள்திரு ரேனியஸ் அவர்கள் மேற்கொள்ளவும் அருள்திரு ஸிமிட் அவர்கள் பாளையங்கோட்டையில் இருந்த பள்ளிக்கூடங்களில் கல்வி அருட்பணியை பொறுப்பெடுக்கவும் தங்களுக்குள் அருட்பணியை பகிர்ந்துக் கொண்டு தத்தம் பணிகளைத் தொடங்கினார்கள். அதாவது 1825ல் ரேனியஸ் அவர்களும் ஸிமிட் அவர்களும் திருநெலவேலி அருட்பணி தளத்தைப் பொறுப்பேற்று ஐந்து ஆண்டுகளில் திருநெல்வேலியின் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 514 குடும்பங்கள்; 4300 தனிநபர்கள்; 89 கிராமங்களில் வாழ்ந்து வந்தனர். இவர்களை 13 வட்டங்களாகப் பிரித்து உபதேசியார்களின் கண்காணிப்பில் இருந்தனர்.

1829 ல் அன்றைய ஒருங்கிணைந்த திருநெல்வேலியில் இன்றைய திருநெல்வேலி, தூத்துக்குடி, விருதுநகர், சாத்தூர், சிவகாசி, மற்றும் திருவில்லிப்புத்தூர் ஆகியப் பகுதிகளை உள்ளடக்கியதாகும். இப்பெரும் பகுதியில் சிதறியிருந்த கிராமத் திருச்சபைகளை முறையே பாளையங்கோட்டை, சாத்தான்குளம் மற்றும் டோனாவூர் என மூன்று சேகரங்களாகப் பிரிக்கப்பட்டு, அதன்படி அருள்திரு. ரேனியஸ் அவர்கள் பாளையங்கோட்டை சேகரத்தையும், அருள்திரு ஸிமிட் அவர்கள் சாத்தான்குளம் சேகரத்தையும், அருட்திரு வின்கிளர் அவர்கள் டோனாவூர் சேகரத்தையும் பொறுப்பெடுத்தார்கள், என திருச்சபை ஆசிரியர் அருள்திரு. டி. கிருஸ்துதாஸ் அவர்கள் கூறுவதாக முனைவர் திருமதி ஜான்சி பால்ராஜ் அவர்கள் டோனவூர் நட்சத்திரங்களில் குறிப்பிடுகின்றார்.

திருநெல்வேலி மண்டலத்தில் 1830 ஆம் ஆண்டில் 2,000 குடும்பங்களைச் சேர்ந்த 7,500 கிறிஸ்தவர்கள் 244 கிராமங்களில் வாழ்ந்து வந்தனர். இத்துடன் 62 பள்ளிகளில் 1,300 மாணவர்கள் படித்துக் கொண்டிருந்தனர். இவர் 1830 ஆம் ஆண்டு 'உலக சரித்திர மாலை' என்ற நூலை எழுதினார் இது சென்னை சி. எம். எஸ் அச்சகத்திலிருந்து வெளியிடப்பட்டது. இது பள்ளிப் பாட நூலாக இருந்திருக்கக் கூடும் என நான் நம்புகின்றேன்.

1830 ஆம் ஆண்டு அருள்திரு ஸிமிட் அவர்களுக்கு ஏற்பட்ட உடல் நலக் குறைவு அவரை நீலகிரி மலைக்கு செல்ல வேண்டிய கட்டாயத்தை உருவாக்கிது. எனவே உள்ளூர் நிர்வாகக் குழுவினர் இவர் நீலகிரி மலைக்குச் செல்ல அனுமதியளித்து. அந் நாட்களில் பிரித்தானியாவைச் சாராதவர்கள் (இவர் ஜெர்மன் நாட்டவர் என்பது கவனிக்கபட வேண்டும்) பிரித்தானிய ஆளுகைக்குட்பட்ட கோயமுத்தூருக்கு வர பிரித்தானியா கிழக்கிந்திய கம்பெனி அரசிடமிருந்துக் கடவுச் சீட்டுப் (Pass Port) பெற வேண்டும், அதன்படி அருள்திரு ஸிமிட் அவர்கள் பிரித்தானிய கிழக்கிந்திய கம்பெனியின் ஆளுநருக்கு விண்ணப்பித்தார், ஆளுநர் அவர்கள் ஆயரவர்களை 1830 ஆம் ஆண்டு முதல் 1836 ஆம் ஆண்டு வரை நீலகிரியில்

தங்கிக்கொள்ளவும், பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி நடத்தவும் அனுமதியளித்தார்.

அருள்திரு ஸிமிட் அவர்கள் உதகையில் குடியேறிய சமயத்தில் திருச்சபை அருட்பணி சங்கத்தாரின் (Church Mission Society) ஐரோப்பியர்களுக்கான இலக்கண பள்ளி (CMS Grammar School) செயல்பட தொடங்கியிருந்தது, ஆனால் ஆயரவர்களுக்கு அது கவர்ச்சியாக இருக்கவில்லை, மாறாக நீலகிரியின் ஆதிக் குடிகளான படுகர் மற்றும் தொதவர் என்ற தோடர்கள் பால் நாட்டம் சென்றது. அவர்களுக்கு நற்செய்தி அறிவிக்க விழைந்தார், இதனால் அருள்திரு கூப்பர் (Rev. Cooper) என்னும் ஸ்காத்லாந்தவருடன் (Scotland) இணைந்து படுகர்களின் ஹட்டிகளிலும், தொதவர்களின் மந்துகளிலும் நற்செய்தியை அறிவிக்க பயணம் மேற்கொண்டர்.

அருள்திரு ஸிமிட் இணையினர் நீலகிரி மாவட்டத்தில் மாணவியர்களுக்காக பள்ளிக்கூடத்தை தொடங்குவதற்கான அனுமதியையும் பெற்றிருந்தனர். நீலகிரியில் சமவெளிப்பகுதிலிருந்து குடியேறிய தமிழ் மக்களின் கல்வித் தந்தை அருள்திரு பெர்னார்டு ஸிமிட் அவர்கள் என்றால் அது மிகையாகிடாது. அன்னார் முதல் தமிழ் வழிக் கல்வியை உதகமண்டலத்தில் அந்நாட்களில் இருந்த தமிழ் மக்களுக்காக அறிமுகப்படுத்தி, பள்ளிக்கூடங்களை நிறுவி நடத்தி வந்தார். அதன்படி முதல் பள்ளிக்கூடம் உதகமண்டல திருச்சபை அருட்பணி சங்கத்தாருக்குச் சொந்தமான (Church Mission Society) தூய திரித்துவ தேவாலயத்தில் (Holy Trinity Church) வார நாட்களில் நடத்தினார், ஞாயிற்றுக் கிழமைகளில் அதே தேவாலயத்தில் தன்னார்வமாக தமிழ் மொழியில் கிறிஸ்தவ வழிப்பாடு நடத்தி தமது அருட்பணியினை நிறைவேற்றினார். இந்த பணிகளில் எதற்கும் எந்த அருட்பணி சங்கத்தாரிடமும் ஊதியம் பெறவில்லை, தம் அருட்பணிகளை விசுவாசத்துடனும் தன்னார்வத்துடனும் செய்தார், என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

ஆயரவர்கள் சமவெளியிலிருந்து உதகமண்டலத்தில் குடியேறிய தமிழ் மக்களின் மத்தியில் செய்யப்பட்ட அருட்பணியின் பயனாக 1832 ஆம் ஆண்டு தமிழ் கிறிஸ்தவ திருச்சபை ஒன்று நிறுவப்பட்டு அதற்கு தமிழ் அருட்பணி (Tamil Mission) என்றுப் பெயர் சூட்டப்பட்டது. அருள்திரு ஸிமிட் அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்டப்படியினால் மேற்சிகிட்சைக்காக ஐரோப்பியா செல்ல வேண்டியச் சூழல் ஏற்பட்டது. தாயகம் செல்ல அனுமதிக் கிடைப்பதற்காக காத்திருந்தக் காலத்தில் ஐரோப்பியர்களின் வீடுகளில் வேலைச்செய்வோர் அரசு அலுவலங்களில் வேலைச் செய்வோர் மற்றும் வியாபாரத்திற்கு வந்தோர் என திரளான தமிழர்கள் உதகமண்டலத்தில் குடியேற தொடங்கியதால் தமிழ் மொழியின் தாக்கம் நீலகிரியின் ஆதிக்குடிகளுக்கும் ஏற்பட்டது, தமிழ் மொழியை அறிய வேண்டியதின் தேவையும் ஏற்பட்டது ஆதிக்குடிகளான தொதவர்கள் தமிழ் கற்க விருப்பம் காண்பித்து இவரிடம் வந்தனர். (ஆதிக்குடிகள் தமிழ் படிக்க ஐரோப்பியரையே நாடவேண்டியிருந்தது.)

அருள்திரு ஸிமிட் அவர்களிடம் தமிழ் கற்க வந்தவருள் ஒருவர் கிறிஸ்தவ மார்க்கத்தை அறிய விருப்பம் காண்பித்தார். ஆயரவர்கள் தொதவர்களுக்கு தமிழ் கற்றுக்கொடுக்கும் அதே சமயத்தில் தொதவ மொழியில் 400 க்கு மேற்பட்ட சொற்களை சேகரித்து அவற்றைத் தொகுத்து ஆய்வுச் செய்தார். தொதவ மொழி எளிமையான மொழி அல்ல அது கற்க கடினமானது என்பதனை என் வாசகர்கள் மனதில் கொள்ள வேண்டுமென கேட்டுக்கொள்ளுகின்றேன். முதல் முதலாக தொதவ மொழி திராவிட மொழி குடும்பத்தைச் சார்ந்தது என ஸிமிட் அவர்கள் நிரூபித்தார். இவரே தொதவ மொழியின் ஆய்வாளர்களான அருள்திரு ஜே. எப். மெட்ஸ், அருள்திரு அறிவர் ஜி. யூ. போப் மற்றும் அருள்திரு அறிவர் கால்ட்வெல் போன்றோருக்கு முன்னோடி எனச் சொன்னால் அது மிகையாகிடாது.

அருட்திரு ஸ்மிட் அவர்கள் முதல் முறையாக நீலகிரியில் வாழ்ந்துவந்த ஆதிக்குடிகளில் ஒருவரான தோதவர்கள் என்ற தோடர்களின் மொழியை கற்றுக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு அவர்களின் மொழியில் இலக்கண நூலொன்றை எழுதினார் மட்டுமல்லாது அருட்திரு அறிவர் கால்ட்வெல் அவர்கள் தொதவ மொழி திராவிட மொழியென்று நிருபிக்கும் முன்னரே தொதவ மொழி திராவிட மொழியென 1837 ஆம் நிருபித்தவர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். அவ்வகையில் ‘தொதவ மொழியின் ஆய்வுத் தந்தை‘ என்று நான் இவரைக் குறிப்பிட விரும்புகிறேன்.

அருள்திரு ஸிமிட் அவர்களும் அவர்களின் குழந்தைகள் உடல் நலம் குறைந்ததினால் மேற்சிகிட்சைக்காக தம் தாய் நாட்டிற்கு செல்ல விண்ணப்பித்தார், அனுமதி உடனே கிடைக்கவில்லை, இதற்கிடையே இவரது மூன்றுக் குழந்தைகளின் உடல் நிலை மிகவும் மோசமானது, இதனால் குழந்தைகள் ஒருவர் பின் ஒருவரென மூன்றுக் குழந்தைகளும் நான்கு மாத இடைவெளியில் இறந்து விடவே, தம் அன்புச் செல்லப் பிள்ளைகள் மூவரையும் மரணத்தில் பறிக்கொடுத்தவர் மனமுடைந்த நிலையில் 1836 ஆம் ஆண்டு தம் தாயகமான ஜெர்மனிக்கு சென்றார்.

உதகமண்டலத்திலிருந்த தமிழ் கிறிஸ்தவர்கள் கோத்தகிரியிலிருந்த ஒரு தமிழ் நற்செய்தியாளரின் மேற்பார்வையின் கீழ் இருந்தனர். இதனிடையே தூய ஸ்தேவான் தேவாலயத்தார் இன்றைக்கு இருக்கின்ற தூய திரித்துவ தேவாலய கட்டிடத்தைக் கட்டியிருந்தனர். அதில் ஸ்தேவன் தேவாலயத்தின் ஆயர் அருள்திரு ஹார்பர் அவர்கள் தமிழ் கிறிஸ்தவர்களுக்காக தொழுகை நடத்தினார்.

உடல்நலமும் மனநலமும் தேறிய அருள்திரு ஸிமிட் அவர்கள் 1845 ஆம் ஆண்டு நீலகிரி அருட்பணிதளத்திற்கு மீண்டும் வந்து உதகமண்டலத்தில் தமது அருட்பணியினை மறு ஊக்கத்துடன் தொடர்ந்தார். அந்நாட்களில் உதகமண்டலத்திலிருந்த தமிழ் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை சுமார் 120 பேர். ஆயரவர்கள் திருச்சபையின் திருப்பணி மட்டுமல்லாது கல்வி திருப்பணியை முக்கியப்படுத்தினார். இவர் தூய திரித்துவ ஆலய வளாகம் உட்பட உதகமண்டலம் கடை வீதி (Market) மற்றும் காந்தள் போன்ற மூன்று இடங்களில் தமிழ் பள்ளிக் கூடங்களை நிறுவி நிர்வாகித்து வந்தார்.

அருள்திரு ஸிமிட் அவர்கள் தாவரங்களை சேகரிக்கும் ஆவல் கொண்டோராக இருந்தார். இவர் தம் ஓய்வு நேரங்களில் நீலகிரி மாவட்டத்தில் காணப்பட்ட முக்கியத்துவம் பெறாத தாவரங்களின் முக்கியத்துவத்தை குறித்த ஆய்வு மேற்கொண்டார். தாவரங்கள் குறித்தான தமது ஆய்வுகளுக்காக நிறைஞர் (Doctorate) பட்டம் பெற்றார். மேலும் நீலகிரி பெரணி பட்டியலையும் (A list of Neilgherry ferns), நீலகிரியின் பாசிகள் பட்டியலையும் (A list

of Neilgherry Mosses) தயாரித்து இரண்டு புத்தகங்களாக வெளியிட்டு நீலகிரியின் தாவரங்களின் புகழை உலகறியச் செய்தார்.

இவரே நீலகிரியின் பழங்குடிகளான தொதவர்கள் மத்தியில் பணியாற்றிய முன்னோடி அருட்பணியாளர் எனில் அது மிகையாகிடாது, ஆனால் அப்பணியானது எதிர்பார்த்த அளவுக்கு பலனையளிக்கவில்லை. இருப்பினும் சமவெளிப் பகுதியிலிருந்து நீலகிரி மாவட்டத்தில் குடியேறியிருந்த தமிழ்தலித்துக்கள் மத்தியில் இவர் ஆற்றிய திருப்பணியானது

பொன்னெழுத்துக்களால் குறிக்கப்பட வேண்டும். இவர் தமிழ் மக்கள் மத்தியில் மூன்று பள்ளிக்கூடங்கள் நடத்தினார், அவர்களுக்கு தமிழ் மொழியில் கிறிஸ்தவ வழிப்பாடு நடத்தி, அருளுரைகள் செய்து, கடைவீதிகளிலும் கிராமங்களிலும் துண்டு பிரசுரங்களையும் சிறு நூல்களையும் வினியோகித்து, செய்த நற்பணிகளும் அருட்பணிகளும் திருபணிகளும் வீண்போகவில்லை, பற்பல இன்னல்கள் வாயிலாக தம் அழைப்பை நிறைவேற்றிடினும் திருச்சபை அருட்பணி சங்கத்தார் (சிலத் தலைவர்கள்) இவரது கடினமான நிலையை புரிந்திடாமல் 'கொடுத்த வேலையை சரிவர நிறைவேற்றாதவர்' என தலைமையகத்திற்கு இவர் மீது தேவையற்ற குற்றம் சுமத்தி புகார் அளித்தனர். இது எவ்வளவு மன வேதனையான செயல்!

ஆயரவர்கள் பணிமூப்பு ஓய்வுப் பெற்று கள்ளிக்கோட்டை என்ற கோழிக்கோட்டிற்குச் (Calicut) சென்று அங்கு சிலகாலம் இருந்தப் பின்னர் உடல் நலம் குறைவுப்பட்டு தன்னை ஆட்கொண்ட தேவாதி தேவனிடம் நித்திய இளைப்பாறுதலுக்குட் சென்றார், அவரது உடல் அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.

ஆயரவர்கள் இரத்த சாட்சியாக மறிக்காவிட்டாலும் இவர் வாழ்வு ஒரு இரத்த சாட்சிக்கு பொருத்தமான வாழ்வாக இருந்ததெனில் அது மிகையல்ல என நான் எண்ணுகிறேன்.

---

# சமூக மேம்பாட்டில் உயிர்களின் விரயம்!!

Dr. ஜான்சிபால்ராஜ்
வன்னியன்குடியிருப்பு.

மனிதன் உட்பட அனைத்து உயிரினங்களும் தமது சமூக மேம்பாட்டிற்கான போராட்டங்களில் வெற்றிக்கான வழிமுறைகளாகப் பெரும்பாலும் மனப்பான்மைகளில் பலவீனமானவைகளே அடக்குமுறைகளை மேற்கொள்கின்றன. ஆயினும் அன்பின் அடிப்படையில் வீரியமிகு நிலையான நேர்நிலை பாதிப்புகளை மேற்கொண்டோர்கள் தான் சாதித்திருக்கின்றனர் என்பதே வரலாற்றின் வழிநெடுகே காணமுடிகிறது!

அதிலும் தமது கொள்கைக்களுக்காக மீட்டெடுக்கவியலா தம் உயிரையே மேம்பட்ட அவ்வெற்றிக்காக செலவிடுவதுதான் சீரணிக்கவியலா தன்மையோடு மனித மனங்களில் ஆழப்பதிந்து தம் கருத்தை உறுதிபடுத்தும் ஆயுதங்களாகின்றன. அவ்வழியில் கிறித்தவத்தின் துவக்கமும் முடிவில்லா தொடர்ச்சியும் அன்பிற்கே உரிய அடிப்படை பரிமாணங்களால் தான் வென்று நிற்கின்றன என்பது உலகளாவிய ஏற்பு நிலை!

உலகில் மனிதச் சமூகத்தில் அதன் முன்னேற்றப் பாதைகளில் நடைபெற்றுள்ள புரட்சிப் போராட்டங்களும் நியாயமான விடுதலை வேட்கைகளும் கூட மனித உயிர்களை விழுங்கி கொண்டுதான் உயிர்ப்படைந்திருக்கின்றன. இந்நிலைப்பாட்டில் தம்மையே இழக்கும் நபர்கள், தாம் கொண்ட கொள்கைகளை எதிர்ப்போரால் கொடூரமாக கொல்லப்படுவது அக்கொள்கைக்கான உறுதிப்பாட்டை உணர்த்தும் இரத்த சாட்சிகளாக கிறித்தவ வரலாற்றினால் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

அவ்விதத்தில் உலகின் அமைதியையும் சமாதானத்தையும் நிலைநிறுத்தும் நோக்கோடு போதித்து, அர்த்தமற்ற சடங்காசாரமான மரபுகளை எதிர்த்தும் அவற்றை வழக்கொழித்தும் எதார்த்தமான உலக வாழ்க்கை முறையை ஏற்படுத்திட தேவையான ஆரம்பகட்ட செயற்பாடுகளைக் கட்டமைத்த யூத மரபினரான இயேசுவை அவர்தம் புரட்சியை விரும்பாத அன்றைய ஆட்சியாளர்கள் மற்றும் அவர் சார்ந்திருந்த சமயப் போதகர்களும் தோல்வி பயத்தினால் கொலை செய்துவிட திட்டமிட்டு கொடூரமான அக்கொலையை நிறைவேற்றினர். அந்தந்த கால கட்டங்களில் மனிதகுல மேம்பாட்டில் ஏற்படுத்தப்பட்ட சமூகபொருளாதார, சமய மாற்றங்களுக்கு எதிரான அதிதீவிரமான எதிர்ப்புகளை வரலாற்றின் பக்கங்கள் செம்மை வண்ணம் பூசி பதித்திருக்கின்றன. பல இன்னுயிர்கள் அதற்காக தாராளமாக செலவு செய்யவும் பட்டிருக்கின்றன.

கிறித்தவமும் அதன் வளர்ச்சிப் பாதைகளில் எதிர்ப்பாளர்களால் பல உயிர்பலிகளை எதிர்கொண்டிருக்கிறது. அன்பையும் சமாதானத்தையும் முன்னிருத்திய இச்சமயக் கொள்கைகளை ஒழிக்கப் பயன்படுத்திய கொடூரமான வழிமுறை, அதன் உருவாக்கிகளையும் அதனோடு இணைந்து கொள்ள முற்பட்டோரையும் அவற்றை விட்டுவிட வற்புறுத்தி உயிரோடு வதைத்து உயிர் உடலைவிட்டுப் பிரியும்வரைச் சிதைத்து

அழித்திருக்கின்றனர்..!

ஆனாலும் பெரும்பாலானோர் தம் இறுதி மூச்சுவரை இயேசு கிறித்துவின் கொள்கைகளுக்கு நான்( நாங்கள்) சாட்சிகள் என்றே முழக்கமிட்டு உலகக் கிறித்தவ திருச்சபையின் அஸ்திபார கற்களாய் இன்றும் நின்று கொண்டிருக்கின்றனர். விவிலியத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதி கிறித்தவத்தின் துவக்கத்தையும் அதன் தொடர்ச்சியையும் தெளிவுபடுத்துகிறது.கிறிஸ்துவாக ஏற்கப்பட்ட இயேசுவின் பிறப்பைத் தொடர்ந்து முதல் மூன்று நூற்றாண்டுகளும் இந்த எதிர்ப்பலைகளில் சிக்கி சின்னாபின்னமாகி உயிர்நீத்த கொள்கைவாதிகளான கிறித்தவர்கள் ஏராளம். அவ்வலையின் மும்முரமான இரைச்சல் இன்றுவரை உலகின் ஏதாவதொரு மூலையில் இருந்தபடி அதே வேலையை செய்து கொண்டுதான் இருக்கிறது!

தொடக்கக் கால கிறித்தவத்தின் அடித்தள நிலைப்பாட்டில் ஏசுவின் சீடர்கள் பெரும்பாலானோர் கொல்லப்பட்டனர். அவர்களுள் சீமோன் என்ற பேதுருவின் உறுதியான நம்பிக்கையோடான பிரச்சார திறனால் மக்கள் ஆயிரக் கணக்கில் கிறித்தவத்தை ஏற்றனர். இதனால் ரோமப் பேரரசு அவரை தீர்த்துக் கட்ட முடிவு செய்தது. கி.பி 61 ஆம் நூற்றாண்டில் அவரோடு ஒருமித்து கிறித்தவச் சமயப் பணியை மேற்கொண்ட அவரது மனைவியையும் பேதுருவின் கண்ணெதிரே சிலுவையிலறைந்து கொன்றனர். அந்த கொடுங்காட்சியை அவரை பார்க்கும்படியும் வற்புறுத்தியுள்ளனர். .! (Eusebius. Ecclesiastical History).

அத்தோடு அச்சீடனையும் சிலுவையிலறைந்தே கொன்றனர். அவரை தான் கிறித்தவத் திருச்சபையின் முதல் பேராயர் என்று அச்சமய வரலாறு வர்ணிக்கின்றது. அவரது இம்மரணம் மேலும் கிறிஸ்த்தவத்தின் வளர்ச்சி வேகத்தைப் பன்மடங்கு அதிகரித்ததேயன்றி சாவுபயத்தால் குன்றி போகவில்லை என்பதே வரலாற்றுண்மை. ஆத்துமா அழிவில்லாதது போல ஆத்மீகமான கொள்கைகளும் நியாயமான சமூக மாற்றங்களும் அழிவில்லாத தன்மையுடையனவாக நிலைத்து வளர்ந்தோங்குகின்றன! கிறித்தவமும் அதற்கு விதிவிலக்கானதல்ல!!

---

## சரித்திரத் தடயங்கள்

# வில்லியம் டிண்டேல்

Father of English Bible Translators

நிருபா ஜேசுவடியான்,
சென்னை



**டிண்டேலின் இளமைக்காலம்:**

வில்லியம் டிண்டேல் 1494ம் ஆண்டு இங்கிலாந்து தேசத்தில் பிறந்தார். சிறு வயது முதலே மிகவும் பயபக்தியுடன் வளர்க்கப் பட்டார். பாரம்பரிய கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்திருந்தாலும், ரோமன் கத்தோலிக்க திருச்சபையின் முந்தைய கால மூடநம்பிக்கைகள் இவரை சிந்திக்க வைத்தன. ஆக்ஸ்போர்ட் மற்றும் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் தனது பட்டப்படிப்பை முடித்தார். இதன் விளைவு, அவரை ஒரு சபை சீர்திருத்தவாதியாக உருவாக்கியது. மார்ட்டின் லூத்தர் மற்றும் சில புராட்டஸ்டன்ட் சீர்திருத்தவாதிகளின் கருத்து இவரை மிகவும் கவர்ந்தது. 1521 ம் ஆண்டு இவர் கத்தோலிக்க குருவாக குருத்துவம் பெற்றார். திரும்பவும் தன் ஊருக்குத் திரும்பி, அங்குள்ள சபையின் போதகரானார். டிண்டேலின் முற்போக்குத்தனமான சிந்தனைகளும், கத்தோலிக்க பழமைவாதத்திற்கு எதிரான இவரது செயல்களும் சபை தலைவர்களின் கவனத்தை திருப்பியது.

**முதல்ஆங்கில வேதம்:**

1523ல் டிண்டேல் லண்டன் திரும்பி புதிய ஏற்பாட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் பணியில் தன்னை ஈடுபடுத்த நினைத்தார். ஆனால் அது சட்ட விரோதமானது என அறிந்து, வேதாகமத்தை சொந்த மொழியில் அச்சிட்டு தருவதன் மூலம் மக்களை சடங்கு சம்பிராதயங்களில் இருந்தும், சபையின் அர்த்தமற்ற சீர்கேடுகளில் இருந்தும் நிச்சயம் விடுவிக்க முடியும் என ஆணித்தரமாக நம்பினார். டிண்டேல் இங்கிலாந்து சபைக்கு எதிராக குரல் கொடுக்க துணிந்தார். மற்றும் இவரது சிந்தனைகள் மார்ட்டின் லுத்தரின் சிந்தனைகளுக்கு ஒத்திருந்தது.

1524ல் டிண்டேல் சில லண்டன் வியாபாரிகளின் உதவியுடன் இங்கிலாந்திலிருந்து புறப்பட்டு ஜெர்மனிக்குச் சென்று குடியேறினார். இதன் மூலம் தனது வேதாகம மொழிபெயர்ப்பு பணியை மிகுந்த பாதுகாப்புடன் நிறைவேற்ற முடியும் என நம்பினார். விட்டன்பர்க் நகரில் பணியைத் தொடர்ந்த

டிண்டேலுக்கு மார்ட்டின் லுத்தரின் ஒத்துழைப்பும் கிடைத்தது. ஒரு வருட பணிக்குப் பின் 1526ல் புதிய ஏற்பாடு புத்தகம் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. இதன் பிரதிகள் வாம்ஸ் பட்டணத்தில் அச்சிடப்பட்டது. அப்போது அவை இங்கிலாந்திற்கு கடத்தி செல்லப்பட்டன. இவையே உலகத்தின் முதல் ஆங்கில வேதாகமம் என்கிறது ஆங்கில காலக் குறிப்பு. கடும் எதிர்ப்பின் மத்தியில் பணி செய்து வந்த டிண்டேல், இனி சிறிது காலம் மறைந்திருந்து மொழி பெயர்ப்புப் பணியைச் செய்யலாம் என எண்ணினார்.

இந்நிலையில் டிண்டேல் தனது நண்பன் ஹென்றி பிலிப்ஸ்ஸால் காட்டி கொடுக்கப்பட்டு கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். வில்வார்டே கோட்டையில் 500 நாட்கள் காவல் செய்யப்பட்டு பல சித்திரவதைகளுக்கு உள்ளானார். 1536 ம் ஆண்டு அக்டோபர் 6ம் தேதியன்று, சத்தியத்தை மறுதலிக்கும் படியும், வேதாகம மொழிபெயர்ப்பு தவறு என்று ஒப்புக்கொள்ளவும் துன்புறுத்தப்பட்டார். முடிவில் உயிருடன் கட்டைகளின் நடுவில் எரிக்கப்படும் படி தீர்ப்பு வெளியானது. அவர் உயிருடன் எரிக்கப்படும் முன்னே ஆயிரக்கணக்கான ஆங்கில புதிய ஏற்பாடுகள் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன.

'கர்த்தாவே இங்கிலாந்து மன்னரின் கண்களை திறந்தருளும்' என்னும் இறுதி முழக்கத்துடன் டிண்டேல் தனது மூச்சை விட்டார். இதன் விளைவு வெறும் மூன்றே வருடத்தில் மன்னர் 8ம் ஹென்றி, டிண்டேலின் மொழி, பெயர்ப்பை அடிப்படையாக கொண்டு முதல் ஆங்கில வேதாகமம் 'Great Bible' யை வெளியிட்டார். டிண்டேல் இறந்த போது பழைய ஏற்பாடு முழுவதும் மொழிபெயர்க்கப்படவில்லை என்றாலும், அதன் பின் மொழிபெயர்க்கப்பட்ட ஆங்கில வேதாகமங்கள் அனைத்தும், அவரின் மொழி பெயர்ப்பை அடிப்படையாக கொண்டே மொழிபெயர்க்கப்பட்டன. 1611ல் வெளியிடப்பட்ட பிரபலமான 'King James Version' ம் இதில் அடங்கும்.

சூழ்நிலை சாதகமில்லாத அந்த காலத்திலும் தேவனுக்காக வாழ்ந்து மடிவதையே தன்னுடைய வாஞ்சையாகக் கொண்டிருந்தார். கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும், செத்ததேயாகில் மிகுந்த பலனைக்கொடுக்கும் (யோவான் 12:24) என்ற வேதவசனத்தின் படி, டிண்டேல் என்னும் கோதுமை மடிந்ததால் மட்டுமே இன்று அதனால் விளைந்த பலனை நாம் அனுபவித்து வருகிறோம்.

---

# சேலம் மண்ணில் மடிந்த கோதுமை மணி

**'இரத்த சாட்சிகளின் இரத்தமே திருச்சபையின் வித்து.'– பிதாப்பிதா தெர்த்துயன்**

ஜே.பர்னபாஸ்,
சேலம்

313 ஆண்டுகளுக்கு முன்பு:

சேலம் மண்ணில் கிறிஸ்து நாதருக்காக இரத்தம் சிந்தியவர்கள் பலர்; அவர்களுள் இரத்தம் சிந்தி மடிந்து இரத்தசாட்சியாக சேலம் கிறிஸ்தவ வரலாற்றில் நிலைத்தவர் சங்கை. இம்மானுவேல் டி குன்ஹா சுவாமியார். இவர் கி.பி.1708 ஆம் ஆண்டு கிருஷ்ணகிரியிலுள்ள கெலமங்கலம் என்ற ஊருக்கு வடக்கே 3/4 மைல் தூரத்தில் இருந்த கப்பிகனாத்தி என்ற ஊரிலிருந்த தேவாலயத்தின் பொறுப்பை ஏற்று, அங்கே கிறிஸ்துவின் நற்செய்தியை தீவிரமாக அறிவித்துவந்தார், அப்பொழுது அவருக்கு 45 வயது. இதற்கு முன்பாக அவர் கஞ்சம் என்ற பகுதியிலும் இரண்டு ஆண்டுகள் உழைத்திருக்கிறார். இந்த கப்பிகனாத்தி தேவாலய மந்தையில் பெரும்பான்மையோர் வன்னியகுலக் கிறிஸ்தவர்கள். கி.பி.1710 ஆம் ஆண்டு முகலாயர்களின் படையெடுப்பில் காகுந்தி, தேன்கனிக் கோட்டை, மற்றும் கப்பிகனாத்தி போன்ற இடங்கள் தாக்குதலுக்கு உள்ளானது. அப்பொழுது கப்பிகனாத்தி தேவாலயத்தையும் அவர்கள் தீக்கிரையாக்கினர். இந்த நிலையில் தனது தேவாலயத்தின் புது கிறிஸ்தவர்களின் தொகையும் அதிகரித்துக் கொண்டே போனதால் சங்கை.குன்ஹா சுவாமியார் இந்த ஊர் விசுவாசிகளுக்கு ஒரு புதிய தேவாலயத்தை சற்று பெரிய அளவில் கட்டிமுடிக்க திட்டமிட்டார். அதற்காக காகுந்தியின் தளவாயிடம் தேவாலயம் கட்ட அனுமதிபெற்று, ஊருக்கு வெளியே ஒரு இடத்தைத் தெரிந்து கொண்டு, அங்கே புதிய தேவாலயத்தை கட்டும் பணியில் ஈடுபட்டுவந்தார்.

புதிய தேவாலய கட்டுமான பணிகளும், சுவாமியாரின் ஞான தீட்சை போதனைகளும், தர்க்க வாதங்களும். அப்பொழுது புதிய தேவாலய கட்டிடம் அருகே ஒரு மரத்தடியில் இருந்த குடிசையில் சங்கை.குன்ஹா சுவாமியார் தங்கியிருந்தார். பகைவர்களின் படையெடுப்பிற்கு அடிக்கடி இந்த பகுதிகள் இலக்காகியிருந்ததால் தேவாலய விசுவாசிகள் சுவாமியார் இப்படி ஊருக்கு வெளியே இரவு நேரங்களிலும் தங்கியிருப்பது மிகவும் ஆபத்தானது என்று எடுத்துக் கூறி, சுவாமியாரை ஊரில் இருந்த தீக்கிரையான தேவாலய கட்டிடத்திலே தங்கியிருக்க கேட்டுக்கொண்டனர். ஆயினும்,

சுவாமியார் அதனை ஏற்காமல் புதிய தேவாலய கட்டுமான பணிகளை வெகு மும்முரமாக கவனித்துவந்தார்.

இந்த நிலையில் சங்கை.குன்ஹா சுவாமியார் ஊருக்கு வெளியே தேவாலயம் கட்டிக்கொண்டிருக்கும் பொழுது இந்துக்களில் அநேகர் அவரிடம் வந்து திருமறையின் உண்மைகளை ஆய்ந்து அறிந்து ஞான தீட்சை பெற நல்லெண்ணங் கொண்டனர். ஆனாலும் பெரும்பான்மையோர் வேத தர்க்கம் செய்யவே அங்கு அவரிடம் வந்தனர். காகுந்தி மடகுருவின் சீடர்களான தாசிரிகள் என்போர் அங்கு வந்து சுவாமியாரோடு வேத தர்க்கம் செய்தபோது, அவர்களை தனது வாதத் திறமையால் சுவாமியார் தோல்வியடையச் செய்து அனுப்பிவிட்டார். இதனால் கோபமடைந்த தாசிரிகள் சங்கை.குன்ஹா சுவாமியாரை பழிவாங்க எண்ணியிருந்தனர். இதனை அறிந்த விசுவாசிகளில் சிலர் சுவாமியாரை தீக்கிரையான தேவாலயத்திலே இரவில் தங்குமாறு ஆலோசனை கூறினர். ஆனாலும் இந்த ஆலோசனைகளை ஏற்காமல் தன்னுடன் நட்பாக இருந்த காகுந்தி தளவாய் பாதுகாப்பில் நம்பிக்கை வைத்து முன்புபோலவே ஊருக்கு வெளியே தேவாலய கட்டுமான பணிகளிலே தீவிரமாக ஈடுபட்டிருந்தார்.

### புதிய தேவாலய பிரதிஷ்டையும் ,சுவாமியாரின் இறுதிநாட்களும், உயிர்த் தியாகமும்:

பலத்த எதிர்ப்புகளுக்கிடையே சங்கை.இம்மானுவேல் டி குன்ஹா சுவாமியார் தனது எண்ணங்கள் மற்றும் திட்டங்களின் அடிப்படையில் ஒரு அழகான தேவாலயத்தை கிறிஸ்து நாதரின் மகிமைக்காக கட்டிமுடித்தார். கி.பி.1711 ஆம் ஆண்டு மே மாதம் ஒன்பதாம் நாள் - கர்த்தர் மோட்சத்திற்கு ஆரோகணமான திருநாளில் (Ascension day)சங்கை. குன்ஹா சுவாமியார் புதிய தேவாலயத்தை பிரதிஷ்டை செய்து அதனை விசுவாசிகள் பயன்பாட்டிற்காக திறந்து வைத்து அங்கே முதல் ஆராதனையை நடத்தினார். ஆனால் அதுவே அவர் அங்கு செய்த கடைசி ஆராதனையாக ஆனது. தேவாலயத்தில் தேவாராதனை நடந்து கொண்டிருக்கும் போதே 40 தாசிரிகள் நாதசுரம்,சிங்கி,சேமண்டி,முதலிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டு, தங்கள் கோவில் காவிக் கொடிகளைப் பிடித்துக்கொண்டே, மிகுந்த ஆரவாரத்துடன் புதிய தேவாலயத்தை நோக்கி வந்துகொண்டிருந்தனர். இந்த பெருத்த ஆரவாரத்தைக் கேட்டு பயந்த கிராம அதிகாரி கலவரம் ஏற்படும் என்று அஞ்சி உடனே தளவாயிடம் கலவரத்தை அடக்க உதவி பெற்றுவர தேவாலயத்திலிருந்த ஒரு கிறிஸ்தவனை அனுப்பினான். உதவி வருவதற்குள் ஆரவாரக் கூட்டம் தேவாலயத்தை நெருங்கி விட்டது. கிறிஸ்தவ பணியாளன் ஒருவன் மூலமாகவும், தேவாலயம் அருகே அதிகரித்து வரும் பேரோசைகளினாலும், வரப்போகிற ஆபத்தை உணர்ந்தவராய் ஆராதனையை முடித்து, விசுவாசிகளை அமைதியாகவும், கிறிஸ்துவுக்காக துன்பப்படுவதற்கும் தயாராக இருக்கவும் அறிவூட்டினார். அதற்குள்ளாகவே பேரிரைச்சலுடன் தாசிரிகளும், அவர்களது ஆதரவாளர்களுடன் தேவாலயத்தை சூழ்ந்துகொண்டு ஒருவரும் உள்ளிருந்து தப்பிவிடாதபடி, பெரிய கதவருகே அணிவகுத்து நின்றனர். ஆனால் குருவான சங்கை.குன்ஹா சுவாமியாரோ தன் மந்தையைத் தனியே விட்டுவிட்டு தான் மட்டும் தப்பி ஓடிவிடக்கூடாது என்று சங்கல்பம் செய்து உறுதியாக தேவாலய பலிபீடத்திலே நின்றார்.

அந்த ஆரவாரக் காரர்களின் தலைவன் திடீரென்று தன்னுடைய சகாக்களுடன் பலிபீடத்திற்குள் ஓடிவந்து தடியால் சுவாமியாருக்கு முதல் அடி கொடுத்தான். உடனே மற்றவர்கள் அவனைத் தொடர்ந்து சுவாமியாரை மூங்கில் தடிகளால் சரமாரியாக அடித்துத்தள்ளினர். அவர்களில் ஒருவன் சுவாமியாரின் வலதுகையை வாளால் வெட்டினான். சில வினாடிகளில் 200க்கும் மேற்பட்ட அடிகள் சுவாமியார் மீது விழுந்தது. தேவாலயத்தில் இருந்த கிறிஸ்தவ ஆடவர்கள் ஆயுதம் தாங்கிய ஆரவாரக் காரர்களிடமிருந்து தங்கள் பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்றுவதைத் தவிர சுவாமியாருக்கு எந்த வித உதவியும் செய்யமுடியாத நிலையில் இருந்தனர். ஒரு பிராமணன் மட்டும் அவர்களை தடுத்திராமல் இருந்திருந்தால் அவர்கள் சுவாமியாரை பலிபீடத்திலேயே கொன்றுபோட்டிருப்பார்கள். பின்னர் தாசிரிகள் தங்கள் மடத்தின் மதகுருவிடம் சுவாமியாரை தேவாலயத்திலிருந்து இழுத்துச் சென்றனர். இவர்களின் அநியாயச் செயலைக் கண்ட நல்ல உள்ளம் கொண்ட சில இந்துக்கள் சுவாமியாரை விட்டுவிடும்படி மன்றாடினர். ஆயினும் நெஞ்சில் ஈரமில்லாத கயவர்கள் அவர்களின் மன்றாட்டிற்கு செவிகொடுக்கவில்லை. அக்காலத்தில் மதவிஷயங்களில் மதகுருக்கள் நீதிபதியாக இருந்து விசாரணை நடத்த அரசனின் அனுமதி பெற்றிருந்தனர்.

### இரத்தசாட்சி சங்கை.இம்மானுவேல் டி குன்ஹா:

தாசிரிகளின் மடாதிபதி புலித் தோலின் மீதமர்ந்து சங்கை.குன்ஹா சாமியாரை விசாரணை செய்தார். இரத்தம் தோய்ந்த உடலோடு இரத்தம் சொட்டச் சொட்ட நிற்க சக்தியின்றி உபதேசியாரின் மேல் சாய்ந்து கொண்டவராக சங்கை.குன்ஹா சுவாமியார் தள்ளாடிக் கொண்டிருந்தார். இந்த இடத்தில் வேத தர்க்கத்திற்கு இடங்கொடுத்தால் தோல்வி நிச்சயம் என்று அறிந்த தாசிரிகளின் குரு சூழ்ச்சியால் அவரை வெல்லத் திட்டமிட்டார். தாசிரிகளின் குற்றச் சாட்டுகளுக்கும், மடகுருவின் சீறலுக்கும் சற்றும் அஞ்சாத சங்கை.குன்ஹா சுவாமியார் தான் ஒரு இரத்தசாட்சியாக மரிக்கப்போவதை எண்ணி பெருமகிழ்ச்சியுற்றவராக இன்முகத்துடன் இருந்தார். ஆனால் எந்த ஒரு மதகுருவிற்கும் மரண தண்டனை அளிக்க அதிகாரம் இல்லை. இதனை தாசிரிகள் தங்கள் மதகுருவிற்கு நினைவுபடுத்தினர்.

இந்த வேளையில் ஒரு புது கிறிஸ்தவன் தானும் தனது சகோதரனும் கிறிஸ்துவின் அடியவராக மாறிவிட்டோம் என்று அந்த மன்றத்திலே அச்சமின்றி வீரமுழக்கம் செய்தான். இதற்குப்பின் மேலும் இரண்டு கிறிஸ்தவர்கள் அம்மன்றத்திற்குள் வந்து தாங்களும் கிறிஸ்துவிற்காக துன்பப்பட ஆயத்தமாக உள்ளோம் என்று சொல்லி சங்கை.குன்ஹா சுவாமியாரின் கால்களில் விழுந்தார்கள். ஆனால் அவ்விருவரும் கொடூரமாக அடித்து வெளியே தள்ளப்பட்டனர். விசுவாசத்தில் உறுதியாக நின்ற உபதேசியாரின் வீரநெஞ்சத்தையும் ஒருவாள் பதம் பார்த்தது. இப்படியாக இவர்களின் இந்த நீதிமன்றம் கிறிஸ்துவின் அடியார்களின் இரத்தத்தால் இரத்தக்களரியானது. இதனைப் பார்த்த பிராமணர்களும் மற்ற இந்துக்களும் வேதனையடைந்தனர். இந்த நிலையில் தனது கோபாவேச வெறியை மறைத்துக் கொண்டு அந்த மதகுரு சங்கை.குன்ஹா சுவாமியாரை பாளையத்தை விட்டு உடனடியாக வெளியேறும்படி உத்தரவிட்டார். குற்றுயிராகவிடப்பட்ட சுவாமியாரின் காயங்களுக்கு சிகிச்சை செய்ய பாளையத்தில் ஒரு இரவு மட்டுமாவது அவரை

தங்கவைக்க அனுமதியளிக்க உத்தரவிட வேண்டுமென்று அவருடன் வந்த மற்றொரு உபதேசியார் அங்கே மன்றாடினார். ஆனால் அதற்கு அனுமதி ஈவு இரக்கமின்றி மறுக்கப்பட்டது. அதற்கு மாறாக உடனடியாக சுவாமியாரை பாளையத்தை விட்டு துரத்தும்படி இரு சேவகர்களுக்கு கட்டளையிட்டார் மதகுரு. மாலை வேளையில் மடாதிபதியின் நீதிமன்றத்திலிருந்து இரு சேவகர் இடையே மெதுவாக தள்ளாடி நடந்து வந்த சுவாமியார் கண்ணீரும் கம்பலையுமாக நின்ற தன் மக்களுக்கு இறுதி ஆசீர் அளித்து, தான் கட்டிமுடித்த அந்த தேவாலயத்தை கடைசி முறையாக ஏறெடுத்துப் பார்த்து விட்டு, கால்நடையாகவே அந்த இரு சேவகர்கள் துணையுடன் பாளையத்தைவிட்டு புறப்பட்டார். இருள் கவ்வியதும் ஒரு கிறிஸ்தவனின் வீட்டில் சுவாமியார் தங்கினார். அந்த இரவில் அவர் பட்ட வேதனை சொல்லுந்தரமன்று. உடல் முழுவதும் பயங்கமான வலிகண்டது;புழுவாய் துடித்தார். காலையில் நால்வர் அவரை கட்டிலின்மேல் கிடத்தி கப்பிகனாத்திக்குத் தூக்கிச் சென்றனர். தருமபுரி கோவிலூரிலிருந்த சங்கை.சந்தியாகு சுவாமியார் இந்த செய்தி கேட்டு உடனே குதிரையேறி நாற்பது மைல் சவாரி செய்து சங்கை.குன்ஹா சுவாமியாரை பார்க்க வந்தார். அவரைக் கண்டதும் சங்கை.குன்ஹா சுவாமியார் மிகுந்த ஆறுதல் அடைந்தார். ஆனாலும் சங்கை.குன்ஹா சுவாமியாருக்கு காய்ச்சல் நெருப்பாய் காய்ந்தது; அவரால் உண்ணவும் முடியவில்லை, உறங்கவும் முடியவில்லை. காய்ச்சலின் அகோரத்தால் அவருக்கு புத்தி பேதலித்து விட்டது. குருதி கெட்டு காயங்களிலிருந்து நிணம் சொட்டியது. பிழைக்கமாட்டார் என்று மருத்துவர் கைவிட்டார். 18 நாட்களாக புளுவென துடிதுடித்து சொல்லொண்ணா வேதனைகளை சகித்த வீர சற்குரு சங்கை.இம்மானுவேல் டி குன்ஹா தனது 52ஆவது வயதில் கிறிஸ்து நாதரின் பெயரை உச்சரித்துக்கொண்டே தன் ஜீவனை ஆண்டவரிடம் ஒப்படைத்தார். இப்படியாக மெய்மறைக்காக இரத்தம் சொட்டி உயிர்விட்ட சங்கை.குன்ஹா சுவாமியாரின் வீர வரலாற்றை அவருடைய உபதேசியாரும், சங்கை.சந்தியாகு சுவாமியாரும் எழுதி பதிவு செய்துள்ளார்கள்.



# டேனிஷ் அருட்பணியாளர்

பிலிப் ராபின்சன்,
அந்தியூர்

இந்திய மண்ணிற்கு அருட் பணியாற்றின மேலை நாட்டினரின் ஒருவரான மார்டன் ஆண்டர்சன் 1890 வது ஆண்டு இந்திய மண்ணில் அருட்பணியாற்ற தம் விருப்பத்தைத் தெரிவித்து அவர் சென்னையை வந்தடைந்தார் தன்னுடைய சொந்த தேசமாகிய டென்மார்க் தேசத்திலிருந்து கடவுளுடைய அருட் பணியை ஆற்ற அவர் மனநிறைவோடு தமிழ் மண்ணை தெரிந்தெடுத்து திருவண்ணாமலையில் தமிழ் ஆசானிடம் தமிழ் மொழியை கற்றுக் கொள்கின்றார். தொடர்ந்து தமிழ் நாட்டின் சேலம் மாவட்டத்தில் அமைந்திருக்கக் கூடிய சேர்வராயன் மலைத் தொடருக்கு வந்து சேர்கின்றார் கிழக்கு தொடர்ச்சி மலையின் ஏற்காடு மலையில் இவர் அமைகின்ற தாபோர் என்கின்ற இடத்தை மையமாக வைத்து அருட் பணியைத் தொடங்குகிறார். மலைவாழ் மக்களிடையே கல்வி சமூக வாழ்வு சுகாதாரம் ஆகியவற்றில் பெரும் கரிசனையோடு அருட் பணியாற்றுகின்றார் தொடர்ந்து 1900 ஆண்டு அவர் சேலத்தின் அருகாமையில் அமைந்திருக்கக் கூடிய டேனிஷ்பேட்டை என்கின்ற இடத்திற்கு தன்னுடைய பணியைத் தொடங்குகிறார். 1895 ஆண்டு இவர் தம் துணைவியார் மற்றும் சகோதரியோடு இணைந்து மருத்துவம் மற்றும் சமூக சேவையில் பெரும் புரட்சியை ஏற்படுத்துகின்றார். குறிப்பாக விவசாயத்தில் அநேக புதிய உத்திகளை உருவாக்கி விவசாய சார்ந்த தொழிலாளர்களுடைய வாழ்வாதாரத்தை உயர்த்த பெரும் பங்கு வகிக்கின்றார்.

இவர்தம் பணி கல்வராயன் மலை ஜவ்வாது மலை என்கின்ற பல இடங்களில் தொடர்ந்து நடைபெறுகின்றது இந்தியாவின் கடவுளுடைய அருட் பணியை செய்த மார்டன் ஆண்டர்சன் 1936 ஆம் ஆண்டு ஒரு சிறிய திருச்சபையை தமிழ் மக்களுக்காக உருவாக்குகின்றார். பனையோலையால் வேயப்பட்ட ஆலயம் சேலத்தில் உருவாகுகின்றது குறிப்பாக பிள்ளைகளுடைய கல்விக்காகவும் அவர்களுடைய வாழ்வாதாரத்திற்காக இவர் பெரும் முயற்சி எடுக்கிறார் தம் காலத்தில் எதிரிகளால் தொல்லை, விஷ ஜந்துக்களின் அனேக அச்சுறுத்தல்,இழப்பு, தவிப்பு என்று எல்லா சூழ்நிலையிலும் கடவுளுக்கு உறுதியாக நின்ற ஆண்டர்சன் நினைவு தேவாலயம் இன்றும் டேனிஷ் பேட்டையில் மேலோங்கி நிற்கின்றது தென்னிந்திய திருச்சபையின் கீழ் செயல்படும் இவ்வாலயம் தொடர்ந்து அவர்தம் வாழ்வு, அவர் தம் பணியை பறைசாற்றிக் கொண்டிருக்கின்றது.

# தடிக்கம்பு தாவீது

அருள்திரு T ஜான் சாமுவேல்,
பண்டாரசெட்டிவிளை

கிறிஸ்தவ வரலாற்றின் சுவர்களில் வடிந்த இரத்தங்களின் கறைகள் இன்னும் பலகாயாமலே இருக்கின்றது என்று சொன்னாலும் மிகையாகாது. உலக புகழ்பெற்ற இறையியலாளரான தெர்த்தூலின் என்பவர் “இரத்தச்சாட்சிகளின் இரத்தமே திருச்சபைகளின் வித்து” என்று கூறுகிறார். இன்றைக்கு இலட்சகக்கணக்கான திருச்சபைகள் வளர்ந்து நிற்பதற்கு காரணம் அன்று தங்கள் இன்னுயிரையும் கிறிஸ்துவுக்காக இழக்க துணிந்த இரத்தச்சாட்சிகளே ஆகும். முதல் இரத்தச்சாட்சியாக மரித்த ஸ்தேவான் முதற்கொண்டு, அப்போஸ்தலர்கள், மிஷனெரிகள், போதகர்கள், ஊழியர்கள் என்று இரத்தசாட்சியாக மரித்தவர்களின் பட்டியல் அதிகம். எபிரேயருக்கு எழுதின நிருபத்தில் இரத்தச்சாட்சியாக மரித்தவர்கள் எப்படி மரித்தார்கள் என்ற முழுநீள பட்டியல் தரப்பட்டிருக்கிறது. எபிரேயர் 11: 37 ‘கல்லெறியுண்டார்கள்’. வாளால் அறுப்புண்டார்கள், பரீட்சைபார்க்கப்பட்டார்கள், பட்டயத்தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள், செம்மறியாட்டுத் தோல்களையும், வெள்ளாட்டுத் தோல்களையும் போர்த்துக் கொண்டு திரிந்து, குறைவையும், உபத்திரவத்தையும் துன்பத்தையும் அனுபவித்தார்கள். இப்படியாக பற்பலவிதமான துன்பங்களை அனுபவித்தும் கூட கிறிஸ்துவின் மேலுள்ள விசுவாசத்தை துளியளவும் விடாதிருந்தார்கள்.

அப்போஸ்தலனாகிய தோமா இந்திய தேசத்தில் வல்லமையான ஊழியத்தினை நிறைவேற்றி தமிழ் மண்ணிலே இரத்தச்சாட்சியாக மரித்தார். அவரது மரணமே இந்திய மண்ணில் கிறிஸ்தவம் விருட்சமாக வளர விதைக்கப்பட்ட ஒரு வித்தாக மாறியது. இந்திய தேசம் சுதந்தரம் அடைவதற்கு முற்பட்ட காலம் அது. வெள்ளையர்கள் கொள்ளையர்களாய் பார்க்கப்பட்ட காலம். பொருட்களை மட்டும் கொள்ளையாட வந்தவர்களுக்கு மத்தியில் சிலர் உள்ளங்களை கிறிஸ்துவுக்காக கொள்ளையாடவும் வந்தார்கள். அவர்களின் வரவால் வளர்ந்தது தான் கிறிஸ்தவம். இந்திய தேசத்தில் கிழக்கிந்திய கம்பெனி என்ற ஒரு கூட்டம் வியாபார நோக்கிற்காக வந்து பின்நாட்களில் நம்முடைய தேசத்தின் சில பலவீனங்களைக் கண்டு நம்மை அடிமைப்படுத்தி ஆளுகை செய்ய ஆரம்பித்தது. அக்காலத்தில் இந்திய தேசத்தின் மிகப்பெரிய பலவீனம் ஒரே சீரான ஆளுகை இல்லாதிருந்தது. சிறு மன்னர்களும், குறுநில மன்னர்களும் தங்கள் தங்கள் பகுதியை ஆண்டு கொண்டிருந்தார்கள். அவர்களுக்கிடையே நடக்கும் போரினை தங்களுக்கு சாதகமாக எடுத்துக் கொண்டு வெள்ளையர்கள் நம்மை அடிமைகளாக்கினார்கள்.

1706ம் ஆண்டு தரங்கம்பாடியில் கால்பதித்த பர்த்தொலொமேயு சீகன்பால்கு மற்றும் ஹென்றி புளுச்சோ மூலமாக கிறிஸ்தவம் வெகுவிரைவாக பரவ ஆரம்பித்தது. பல மிஷனெரிகள் இந்திய தேசத்திற்கு வந்தாலும் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக தரங்கம்பாடிக்கு அனுப்பப்பட்டிருந்த சங்கை சுவார்ட்ஸ் ஐயவர்களின் மிக சிறந்த ஊழியத்தின் பயனாக கிறிஸ்தவம் தென் தமிழகத்தில் வளர ஆரம்பித்தது. திருநெல்வேலி, ராமநாதபுரம், தஞ்சாவூர், திருச்சி, கடலூர் போன்ற பகுதிகளில் காணப்படும் அனைத்து திருச்சபைகளுக்கும் தந்தை என அழைக்கப்படும் பெரும் கன்னியத்திற்குரியவரும் ஆவார். இவரின் ஊழியத்தின் பயனாக தொடப்பட்ட ஒரு ஆத்துமா தான் திருநெல்வேலி திருமண்டிலம் மற்றும் தூத்துக்குடி - நாசரேத் திருமண்டலத்தின் முதல் இரத்தச்சாட்சியாக மரித்த தாவீது சுந்தரானந்தன் ஆவார். தாவீது சுந்தரானந்தன் அவர்களின் இயற்பெயர் சின்னமுத்து ஆகும். சாத்தான்குளத்திற்கும், முதலூருக்கும் இடையே அமைந்துள்ள காலன்குடி என்னும் சிறிய கிராமத்திலே பிறந்தார். பிறந்து சில காலங்களுக்குள்ளாக பெற்றோரை இழந்த சின்னமுத்து யாரும் அற்ற அனாதையானார். யாருமற்ற நிர்கதியாய் நின்ற சின்னமுத்துவையும் அவரது சகோதரியையும், விஜயராமபுரத்தில் வசித்துவந்த அவருடைய தாய்மாமா வளர்க்க முன்வந்தார். சிறிது காலம் அங்கு நிம்மதியாய் கடந்தது. எனினும் மாற்றான்பிள்ளை என்ற எண்ணம் அத்தையின் மனதில் ஓடியதால், சின்னமுத்துவின் நடத்தையில் திருப்தி ஏற்படவில்லை. பற்பல பாடுகளுக்கு மத்தியில் சின்னமுத்து 17 வயதுவரை மாமா வீட்டில் வளர்ந்து வந்தார். வாலிப பருவத்தில் அத்தையின் அடக்குமுறை அவரது வாழ்வை சலிப்படைய செய்தது. கடமை தவறிய குற்றத்திற்காக ஒரு நாள் சின்னமுத்து தண்டிக்கப்பட்டார். தயிர்கடையும் மத்தினைக் கொண்டு சின்னமுத்துவிற்கு அடிவிழுந்தது. அடியின் வலியைக்காட்டிலும் அவமானத்தில் புழுவாக துடித்துப்போனார் சின்னமுத்து. உடனே மாமாவின் வீட்டினை காலி செய்துவிட வேண்டுமென்ற முடிவிற்கு வந்தார். கருப்பட்டி ஏற்றி செல்லும் மாட்டுவண்டியில் இராஜபாளையம் சென்று அங்கு கணக்கராக பணியாற்றினார். அங்கிருந்த மக்களிடம் நல்ல அன்போடு கூட பழகியதின் நிமித்தமாக அங்கிருந்த மக்கள் அனைவரும் அவரை சுந்தரானந்தன் என்று அழைத்தார்கள். பின்பு அங்கிருந்து தஞ்சாவூர் சென்றார். தஞ்சாவூரில் இருந்த போது சுவாட்ஸ் ஐயரவர்களைச் சந்திக்கும்படியான வாய்ப்பு கிடைத்தது. அவரது போதனையின் மூலமாக இயேசுவை ஏற்றுக்கொண்டார். அதன் தொடர்ச்சியாக 1795ம் ஆண்டு கிறிஸ்தியான் கோலப் ஐயரவர்களிடம் தாவீது என்ற பெயருடன் ஞானஸ்நானம் பெற்றார். அந்தநாள் முதற்கொண்டு தாவீது சுந்தரானந்தன் என்ற பெயர் அவருக்கு வந்தது.

அச்சமயம் திருநெல்வேலி மிஷன் ஊழியம் மிக சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. நாடார் இன மக்கள் அதிகமாக வசித்து வந்தாலும் இரண்டு பேர் தவிர வேறொருவரும் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதது மிகுந்த வருத்தத்தையே கொடுத்தது. இந்நிலையில் நாடார் குலத்தைச் சார்ந்த தாவீது சுந்தரானந்தன் சுவாட்ஸ் ஐயரவர்களிடத்தில் பயிற்சி பெற்று

உபதேசியாரானார். அச்சமயம் திருநெல்வேலி பகுதியில் ஊழியம் செய்வதற்கு சபை ஊழியர் தேவைப்படவே தாவீது சுந்தரானந்தன் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார். திருநெல்வேலி வந்த தாவீது தன் உறவினர்களைக் காண தன் சொந்த ஊருக்குச் சென்றார். அங்கு பதினாறு நாட்கள் தங்கியிருந்து இயேசுவின் அன்பை அவர்களுக்கு எடுத்துக் கூறினார். அதின்பயனாக நான்கு குடும்பங்கள் இயேசுவை ஏற்றுகொண்டனர். தாவீதின் ஊழியத்தின் பயனால் அங்கு ஒரு சபையும், ஒரு பள்ளிக்கூடமும் உண்டாயிற்று. கிறிஸ்தவர்களாக மாறினதை பொறுக்கமுடியாத மற்ற மக்கள் புதுகிறிஸ்தவர்களுக்கு மிகுந்த உபத்திரவத்தைக் கொடுத்தார்கள். இச்செய்தியை கேள்விப்பட்ட கிளாரிந்தா அம்மையார் இப்பகுதிகளுக்குச் சென்று புதுகிறிஸ்தவர்களை சந்தித்து அவர்களை தைரியப்படுத்தினார்கள். புதிதாக கிறிஸ்துவை ஏற்றுகொண்டவர்களை அப்படியே ஊரில் விட்டுவந்தால், மற்ற மக்களின் எதிர்ப்புகளினால் பின்வாங்கிப் போவார்கள் என்று எண்ணிய தாவீது. புது வழியை யோசிக்க ஆரம்பித்தார். அதின் விளைவாக பாளையங்கோட்டையிலிருந்த கேப்டன் எவரெட் என்பவரின் உதவியோடு கூட அடையல் என்னும் கிராமத்துக்கு அருகில் ஒரு இடத்தை வாங்கி கிறிஸ்தவர்களை குடியேற்றினார்கள். அநேக கிறிஸ்தவர்களை தாம் வாங்கிய இடத்தில் வந்து குடியேறுமாறு அழைப்புக் கொடுத்தார். விஜயராமபுரம் மற்றும் அதின் அருகான கிராமங்களிலிருந்து கிறிஸ்துவை ஏற்றுகொண்டவர்கள் இவ்வாய்ப்பினை பயன்படுத்திக் கொண்டனர். முதல் கிறிஸ்தவக் கிராமாக அது காணப்பட்டப்படியினால் அதற்கு முதலூர் என்று பெயரிட்டார் அவரே அதற்கு முதல் உபதேசியாராகவும் மாறினார். நூற்றுக்கணக்கான நாடார் குல மக்கள் கிறிஸ்துவினண்டை வந்து சேர்ந்தார்கள். அநேக மக்கள் கிறிஸ்துவை ஏற்க ஆரம்பிப்பதை பொறுக்கமுடியாத ஒரு கூட்டம் கிறிஸ்தவர்களை அடித்து துன்புறுத்த ஆரம்பித்தது. கிராமமாக சென்று மக்களை மிரட்டியும் அவர்களை அடித்தும் துன்புறுத்த ஆரம்பித்தது, கிறிஸ்தவர்களுக்கு எதிரானவர்களில் சிலர் முதலூர் ஆலயத்தினை தீக்கிரையாக்கினார்கள். புதிதாக கிறிஸ்துவை ஏற்றுகொண்டவர்களில் பலர் கிறிஸ்துவை புறக்கணிக்க ஆரம்பித்தார்கள். தாவீது சுந்தரானந்தன் மனம் மிகவும் வேதனைக்குள்ளானது. இதற்கு ஒரு முடிவு கட்டவிரும்பினார். கிறிஸ்தவர்களை பாதுகாக்கும்படியாக 400 வாலிபர்களை ஒரு சேனையாக சேர்த்தார். தடிக்கம்புக் கொண்டு கிறிஸ்தவர்களைத் தாக்கவருபவர்களைத் தடிக்கம்புக் கொண்டே விரட்ட தீர்மானித்தார். அந்த கூட்டம் ஒரு சேனையாக மாறியது. அக்கூட்டத்திற்கு 'தடிக்கம்பு சேனை' என்று பெயரிட்டார்கள். தாவீது சுந்தரானந்தனுக்கு தடிக்கம்பு உபதேசியார் என்று அழைக்கப்பட்டார். இக்காரியம் புதிய கிறிஸ்தவர்களுக்கு பேருதவியாக இருந்தாலும், சத்தியநாதன் ஐயரவர்களுக்கு இதில் உடன்பாடு இல்லாததினால் மேல் மட்டத்தில் இருந்தவர்களின் வெறுப்பை சம்பாதித்தார். அநேக மக்கள் இவரது இயக்கத்திற்கு முற்றுபுள்ளி வைக்க விரும்பினார்கள். பலமுறை தாவீது சுந்தரானந்தனைக் கொலை செய்ய வகைத்தேடினார்கள். ஒவ்வொரு முறையும் தன்னைக் காத்துக் கொண்டார். இறுதியாக 1806ம் ஆண்டு பெத்லகேம் என்ற ஊரில் யாரும் எதிர்பாராதவிதமாக இறந்து கிடந்தார். அவரால் ஆதரிக்கப்பட்ட மக்கள் பெரும் துயர் அடைந்தார்கள். குட்டம் பகுதியில் அவருக்கு இருந்த எதிர்ப்பினால் அப்பகுதி மக்கள் அவருக்கு கொடுத்த உணவில் விஷம் வைத்துக் கொலை செய்திருக்கலாம் என்று கருதுகிறார்கள். திருநெல்வேலி பகுதியில் நாடார் மக்கள் மத்தியில் கிறிஸ்தவம் பெரிதும் காரணமாக இருந்தவர் தாவீது சுந்தரானந்தன் அவர்கள். இரு பெரும் திருமண்டலமான திருநெல்வேலி திருமண்டலம் மற்றும் தூத்துக்குடி - நாசரேத் திருமண்டலத்தில் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை பெருக தாவீது சுந்தரானந்தன் அவர்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. இம்மண்ணில் கிறிஸ்துவுக்காக தன் உயிர் கொடுத்த முதல் மாமனிதரும் இவரே. தூத்துக்குடி - நாசரேத் திருமண்டலத்தில் தாவீது சுந்தரானந்தன் அவர்களின் ஊழியத்தினைக் கனப்படுத்தும்படியாக ஒரு கவுன்சிலுக்கு இவரது பெயர் சூட்டப்பட்டுள்ளது.

# திரும்பிப் பார்க்கிறேன்!

மோ. ஜோ

திருச்சபை வரலாறு என்பது இரத்தசாட்சிகளின் வரலாறே. ஆம்! திருச்சபை வரலாற்றை நாம் திரும்பிப்பார்த்தோமென்றால், கி.பி. முதல் நூற்றாண்டில் இருந்தே தேவனின் திருச்சபை கட்டப்பட அநேகர் இரத்தசாட்சிகளாய் மரித்திருக்கின்றனர். ஏரோது ராஜா யாக்கோபைக் கொலை செய்தது (அப்.12:1,2) முதல் இன்று வரை திரளானோர் தேவன் பேரில் வைக்கும் விசுவாசத்திற்காக கொல்லப்பட்டுவருகின்றனர். 'இரத்தசாட்சி கூட்டம் சத்திய பாதையில், நித்தம் தம்மை தத்தம் செய்தே வீரசேவையில், ஜீவன் சுகம் பெலன் யாவையும் ஈந்ததால் சுத்த சுவிசேஷம் ஓங்குதே,' என்ற பாடல் வரிகள் நினைவுக்கு வருகிறது. எந்த இடத்தில் இரத்தசாட்சிகள் மரித்தார்களோ, அந்த இடத்தில் பின்நாட்களில் தேவன் வல்லமையாய் செயல்பட்டார் என்பதையும் நாம் வரலாற்றில் பார்க்கிறோம். அந்த வகையில், இந்தியாவிற்கு சுவிசேஷத்தைக் கொண்டுவந்து, திருச்சபைகளை ஸ்தாபித்து, இரத்தசாட்சியாக மரித்துப்போன தோமாவைப்பற்றி இன்று நாம் அறிந்துகொள்ளலாம். இயேசு கிறிஸ்துவின் பரமேறுதலுக்குப்பின், தோமா மெசப்படோமியாவிலுள்ள எடேசா நகரில் தனது ஊழியத்தை ஆரம்பித்தார். பின்னர், பாரசீகத்திலுள்ள அபியாபணியில் ஊழியம் செய்தார். இந்தியாவில் பஞ்சாபை ஆண்டுவந்த கொண்டபோரஸ் மன்னனுக்கு கட்டிடம் கட்டுவதற்காக அவரது அமைச்சரால் வரவழைக்கப்பட்டார். கட்டிடம் கட்ட கொடுக்கப்பட்டப் பெருந்தொகையை தனது ஊழியத்திற்காக செலவழித்தார் எனவும், பின்னர், 'எனக்காகக் கட்டப்பட்ட மாளிகை எங்கே?' என மன்னன் கேட்டபோது, 'அது பரலோகத்தில் உள்ளது,' எனவும் கூறினாராம். அச்சமயம் கொண்டபோரஸ் மன்னனின் சகோதரன் தரிசனத்தில் மன்னனுக்காக பரலோகத்தில் கட்டப்பட்டிருந்த மாளிகையைக் கண்டு சாட்சியிட்டதாகவும், பின்னர், மன்னனும் அவரைச் சார்ந்தவர்களும் மனமாற்றம் அடைந்தனர் எனவும் பாரம்பரியங்கள் கூறுகின்றன.

கி.பி. 49இல் அரசகுமாரன் காட் என்பவன் மரணமடைந்தபோது, தோமா அவனை உயிரோடு எழுப்பினார் எனவும் கூறப்படுகிறது. குஷானியரின் படையெடுப்புக் காரணமாக தோமா, பஞ்சாபில் உருவாகிய திருச்சபையை 'சாந்தியஸ்' என்ற தனது உதவி ஊழியர் வசம் ஒப்படைத்துவிட்டு, கி.பி. 52இல் கேரளா கடற்கரையிலுள்ள கிராங்கனூர்' என்ற இடத்தை அடைந்து தனது ஊழியத்தை ஆரம்பித்தார். தொடர்ந்து கேரளாவில் ஊழியம் செய்த தோமா, கிராங்கனூர், கோகாமங்கலம், நிரணம், சாயல், பாவூர், பாரூர், கொல்லம் ஆகிய ஏழு இடங்களில் சபையை நிறுவினார். பின்னர், சென்னையிலும் சிலகாலம் ஊழியம் செய்துள்ளார். சென்னையில் ஊழியம் செய்துகொண்டிருந்தபோது (கி.பி. 72) மதவெறிபிடித்த சிலர், தோமாவை ஈட்டியால் குத்திக் கொன்றனர். அன்பான வாசகர்களே! தேவன் தோமாவை இந்தியாவிற்கு அப்போஸ்தலனாக அனுப்பியதை நன்றியோடு நினைவுகூருவோம். சுவிசேஷ வாஞ்சை நம்மையும் பற்றிப்பிடிக்கட்டும். மதரீதியான தாக்குதல்கள் அதிகரித்துவரும் இந்நாட்களில், பெயர் கிறிஸ்தவராய் இருக்கும் நிலையை விட்டுவிட்டு, 'தேவனுக்காக மரித்தாலும் விசுவாசத்தை விடமாட்டேன்' என்னும் நிலையை அடைய முயல்வோம். தேவன் நமக்கு உதவி செய்வாராக.

**இயேசுவின் பின்னே நாம் ஓடிடுவோமே!**
**இயேசுவுக்காய் ஜீவன் வைத்திடுவோமே!**
**ஆதிப் பிதாக்களுடன் இரத்தசாட்சிகள்!**
**ஆர்ப்பரித்து கூடி வாழுவோம்!**

THE HISTORY OF THE CHURCH IS THE HISTORY OF THE MARTYRS

# வரலாற்று சங்கம்

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரால் அரும்பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. வரலாற்று சங்கத்திற்கு உதவியாக இக்காரியங்களில் குருத்துவ கல்லூரி மாணவர்கள் பலர் செயல்பட்டு வருகிறார்கள். அவர்களோடு இணைந்து தமிழ்நாடு முழுவதும் உள்ள பல ஆய்வாளர்களுடன் இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றை பதிவு செய்வதில் ஆண்டவர் அதிகமாக பயன்படுத்திய தேவதாசர்கள் அநேகம் பேர் உண்டு. வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா,யோவான்,பேதுரு,பவுல், ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தை காணும்போது ஆண்டவருக்கு நன்றி செலுத்துகின்றோம்.



திருச்சபை வரலாறு, மிஷனரிகள் வரலாறு, கிறிஸ்தவ பாடல்கள் உருவான வரலாறு, பாடல் ஆசிரியர்களின் வரலாறு, கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள் உருவாக்கம் பெற்ற வரலாறு, போன்ற வரலாறு சார்புடைய காரியங்கள் வாட்ஸ் அப், முகநூல் இணையம் யூ டியூப் வாயிலாக இதுவரைப் பகிர்ந்து கொள்ளப்பட்டன ஆனாலும் எழுதப்பட்ட வார்த்தை நிலையானது Written word is Remineth என்ற பொன்மொழிக்கு ஏற்ப வரலாறு சம்பந்தப்பட்ட காரியங்களை ஒருங்கிணைத்து கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் என்ற மாத இதழை தொடர்ந்து வெளியிட்டு வருகின்றோம். இந்த மாதாந்திர இதழில் வெளிவரும் கிறிஸ்தவ வரலாறு சம்பந்தப்பட்ட காரியங்கள் நம் அனைவருக்கும் கிறிஸ்தவ வரலாறு சம்பந்தப்பட்ட ஆர்வத்தை உருவாக்கும் வண்ணமாக தமிழ் கிறிஸ்தவ வரலாற்றுக் காரியங்கள் குறிப்பாக தமிழக கிறிஸ்தவ வரலாற்று காரியங்கள் பகிரப்பட்டு வருகின்றன. https://www.facebook.com/christianhistorical

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.

1. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக்கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மிஷனரிகள், திருச்சபை வரலாறு, கள ஆய்வுகள், மற்றும் பல வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து. 1500 மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது. https://tchsportal.co.in/



2. காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோத்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர். பெயரில் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம் சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் முதல் நூலகம். இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல் கல்லாகவும் அமையும் மற்றும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தார்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் ஏற்ப்படுத்தப்பட்டுள்ளது. https://library.tchsportal.co.in/

3. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றது. அதிலும் குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு

தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் பெயரிலேயே நினைவு புத்தக அங்காடி ஏற்படுத்தப்பட்டுள்ளது. https://shop.tchsportal.co.in/



4. மிஷனரிகள் நினைவிடங்கள், இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்பு மிக்க ஆலயங்கள், இரத்தத் சாட்சிகளாக மரித்தவர்கள் இடங்களை சுற்றி பார்க்கவும் திருச்சபை மக்களின் வசதிக்காகவும் மற்றும் வெளி இடங்களில் இருந்து வரும் மக்களுக்கு Mission tourist map என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய சுற்றுலா கைடு அமைப்பது. https://library.tchsportal.co.in/



5. கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரிப்பது அவைகளை மின்னணு முறையில் கொண்டு செல்வது மற்றும் அவர்களுடைய வரலாற்று தகவல்களையும் அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்துக் கொண்டு இருக்கின்றோம். https://tchsportal.co.in/



6. கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரிப்பது. சேகரித்தவைகளை விரைவில் ஆய்வு நூலகம் கொண்டு வரவும் நூலகத்தை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டு வருகின்றது. http://search.tchsportal.co.in/

7. மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவது. https://www.youtube.com/c/TinnevellyChristianHistoricalSociety/ , https://www.facebook.com/christianhistoricaltv



8. மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை திருச்சபையுடன் இணைந்து பராமரிப்பது. https://tchsportal.co.in/



9. வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து அவற்றை மக்கள் பார்வைக்கு வைப்பது. அனைத்து சபை மன்றங்களிலும் உருவாக்குவது. http://journals.tchsportal.co.in/

10. திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று ஆய்வுக் கருத்தரங்கம் நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்துவது. http://journals.tchsportal.co.in/



கிறிஸ்துவுக்குள் அன்பான திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்க மற்றும் வரலாற்று சுவடுகள் ஆய்விதழின் வாசகர்கள், எழுத்தாளர்கள் மற்றும் விளம்பரதாரர்கள், உறுப்பினர்கள், நன்கொடையாளர்கள் யாவருக்கும் இனிய புத்தாண்டு நல்வாழ்த்துக்கள். ஒவ்வொரு ஆரம்பமும் புதியதொரு வரலாற்றின் தொடக்கம் ஆகும். கடந்த ஆண்டில் நம் வரலாற்று சங்கத்தின் வழியாக வெளிவந்து கொண்டிருககும் வரலாற்று சுவடுகள் மாத ஆய்விதழ் வரலாற்றில் ஒரு அற்புதமான தொடக்கம். சாதாரணமாக தொடங்கப்பட்ட காரியங்களே வரலாற்றின் பங்கங்களில் மிகப் பெரிய தாக்கங்களை ஏற்படுத்தி இருக்கிறது. நம் மிஷனரிகள் பல்வேறு எதிர்பார்ப்புகளோடும் நோக்கங்களோடும் சாதாரணமாக தொடங்கிய ஊழியங்களே இன்று நம் வாழ்வை வளமாக்கியுள்ளது. ஒரு புதிய ஆண்டினை தொடங்கி இருக்கிற நாம் பெரிய நோக்கங்களை முன்னிறுத்தி செயல்பட்டால் புதியதொரு வரலாற்றை படைக்க முடியும். நம் வரலாற்று சங்கம் மிகப் பெரிய நோக்கங்களோடு இப்புதிய ஆண்டினை தொடங்குகிறது. நம் அனைவரும் இணைந்து செயல்படும் போது நம் நோக்கங்களை நாம் எளிதாக அடையலாம்.

# தென் தமிழகத்தின் கத்தோக்க கிறிஸ்தவ இரத்த சாட்சி தூய. அருளானந்தர் (ஜான் டி பிரிட்டோ)

ஜான் ஞானராஜ்
கல்லிடைக்குறிச்சி

**- ஓர் வரலாற்றுப் பார்வை**

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் நேரடி சீடர் தூய.தோமா அவர்களின் ரத்த சாட்சி மரணத்திற்குப்பின் ஆண்டவருடைய நாமத்திற்கு மகிமையாக ரத்த சாட்சியாக மரித்து இம்மண்ணில் விதைக்கப்பட்ட கத்தோலிக்க கிறிஸ்தவ மிஷனரி தூய. அருளானந்தர் அவர்கள் குறித்து வரலாற்று ரீதியாக பார்ப்போம்.

### சீர்திருத்த கிறிஸ்தவ இரத்த சாட்சிகள்:

தென்தமிழகத்தின்சீர்திருத்தக்கிறிஸ்தவஇரத்தசாட்சிகளான காலன் குடியிருப்பு சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தம், அருளூர் பேதுரு வேதமுத்து திருப்புளியங்குடி நம்பியம்மாள், மருதகுளம் ஏனோக்கு சுரண்டை குமாரவேல் சாம்பவர் வடகரை மோசே ஆகியோரைக் குறித்து நாம் அறிந்துள்ளோம். இவர்கள் 19 ஆம் நூற்றாண்டில் ரத்த சாட்சியாக மரித்தவர்கள் அக்காலத்தில் ஆங்கிலேயர் ஆட்சி தமிழ்நாடு முழுவதும் பரவியிருந்தது. பதினேழு மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டுகளின் குழப்பமான அரசியல் சூழல் பதினேழு மற்றும் பதினெட்டாம் நூற்றாண்டுகள் தென்தமிழகத்தில் குழப்பமான அரசியல் சூழ்நிலை இருந்தது சேர அரசர்களின் ஆட்சி நாயக்க அரசர்களின் ஆட்சி சேதுபதி அரசர்களின் ஆட்சி பாளையக்காரர் எனும் ஜமீன்தார்களின் ஆட்சி, நவாப் ஆட்சி என 1801 வரை ஒரு குழப்பமான சூழ்நிலை நிலவியது அந்த காலகட்டத்தில் இரத்த சாட்சியாக மரித்தவரே தூய. அருளானந்தர் (ஜான் டி பிரிட்டோ) எனும் கத்தோலிக்க மிஷனரி.

### தூய அருளானந்தர் (ஜான் டி பிரிட்டோ) வருகையும் ஐரோப்பியரின் காலனியாதிக்க சூழ்நிலையும்:

தமிழ்நாட்டில் ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், போர்த்துக்கீசியர், டச்சுக்காரர், டேனிஸ்காரர், என பல்வேறு ஐரோப்பியர்கள் வணிகம் செய்வதற்காக இம்மண்ணுக்கு வந்தார்கள், இம்மண்ணில் ஆதிக்கம் செலுத்த தொடங்கினார்கள் அந்த காலகட்டத்தில் தான் இயேசு சபை கத்தோலிக்க மிஷனரி தூய அருளானந்தர் எனப்படும் ஜான் டி பிரிட்டோ அவர்களின் நற்செய்தி பணி தொடங்கியது.

தூய அருளானந்தரின் (ஜான் டி பிரிட்டோ) பிறப்பு போர்த்துக்கல் நாட்டில் லிஸ்பன் மாநகரில் 01.03.1647 ஆம் நாள் சால்வதோர் டி பிரிட்டோ பெறைரா - டோனா பிரிட்டஸ் பெறைரா தம்பதியரின் மகனாக ஜான் டி பிரிட்டோ பிறந்தார். இவரது தந்தை போர்த்துக்கல் அரசருக்கு நெருங்கிய நண்பர் மற்றும் ராணுவ வீரர் நாட்டைக் காக்கும் பணியில் ஜான் டி பிரிட்டோ அவர்களுக்கு 4 வயது இருக்கும் பொழுது தந்தை மரணம் அடைந்தார் தாயாராலும் உடன்பிறந்தோராலும் வளர்க்கப்பட்டார். போர்த்துக்கல் இளவரசருக்கு நெருங்கிய நண்பராக ஜான் டி பிரிட்டோ தேர்ந்தெடுக்கப்பட்டதால் அரண்மனையில் அவர் வளர்ந்தார்.

இளமையில் அவர் சுகவீனம் அடைந்ததால் அவரது தாயார் எனது மகன் உயிர் பிழைத்தால் தூய. சவேரியார் போன்று நீண்ட அங்கியும் கச்சையும் ஓராண்டு அணிந்து வருவான் என பொருத்தனை செய்தாள் மரணத்தருவாயில் இருந்து உயிர் பிழைத்த ஜான் டி பிரிட்டோ தாயின் பொருத்தனைப்படி இயேசு சபைத் துறவியர் அணியும் அங்கியும் கச்சையும் அணிந்து ஆண்டவருக்கு பொருத்தனையை நிறைவேற்றினார்.அந்த காலகட்டத்தில் தான் அரண்மனை ஆடம்பர வாழ்வை வெறுத்து தாமும் இயேசு சபை துறவியாக மாற வேண்டும் என்ற எண்ணம் ஜான் டி பிரிட்டோ அவர்களுக்கு ஏற்பட்டது அக்காலத்தில் அதற்கு பெற்றோரின் அனுமதி தேவை மேலும் ஜான் டி பிரிட்டோ அரண்மனையில் வளர்க்கப்பட்டதால் அரசரின் அனுமதியும் தேவையாயிருந்தது இதற்காக இரு தரப்பிலும் ஜான் டி பிரிட்டோ மன்றாட வேண்டியதாயிற்று இளவரசராக இருந்த அவரது நெருங்கிய நண்பருக்கு இது மிகுந்த கஷ்டமாக இருந்தது அவர் இச்செயலை விரும்பவில்லை ஆனாலும் ஜான் டி பிரிட்டோ அவர்களின் ஜெபம் கேட்கப்பட்டது அனைவரின் அனுமதியும் பெற்று இயேசு சபை துறவியாக அவர் சென்றார்.

### இந்தியாவில் பணி செய்ய ஆர்வம்:

தூய சவேரியார் பணி செய்த இடங்களில் தாமும் பணி செய்ய வேண்டும் என்ற ஆவல் ஜான் டி பிரிட்டோ அவர்களுக்கு இளமையிலேயே இருந்தது. ஆகவே இந்திய மண்ணில் நற்செய்தி அறிவிக்க இயேசு சபை சார்பில் தம்மை அனுப்பும்படி இயேசு சபை தளபதிக்கு அவர் கடிதங்கள் எழுதினார் 1673 இல் பிப்ரவரி மாதம் அவர் குருப்பட்டம் பெற்றார். ஏசு சபை அவரை திருப்பணியாளர் ஆக இந்தியாவிற்கு அனுப்பியது. 25. 03. 1673 ஆம் நாள் தலைநகர் லிஸ்பனில் இருந்து கப்பல் மூலம் புறப்பட்ட ஜான் டி பிரிட்டோ 04.09 1673 அன்று கோவா வந்தடைந்தார். பயிற்சி பெறும் படியாக கொச்சி அம்பலக்காட்டிற்க்கு வந்து தமது பயிற்சியை நிறைவு செய்தார். பின் இயேசு சபை மிஷனரியாக தமிழகத்திற்கு கடந்து வந்தார்.

### மாற்றங்கள்:

அம்பல காட்டில் வைத்தே தமது பெயரை அருளானந்தர் என தமிழ் படுத்திக் கொண்டார் இயேசு சபை துறவியர் அணியும் கருப்பு அங்கியை அகற்றிவிட்டு காவி அங்கி அணிய ஆரம்பித்தார் காதில் குண்டலம், தலையில் சடைமுடி, அதன்மேல் தலைப்பாகை, தோள்மேல் நீண்ட சால்வை, கையிலே ஒரு கம்பு, காலில் மிதியடி கட்டை என தன்னை தமிழ் மய துறவியாக ஆக்கினார்.



தூய அருளானந்தரின் தொடக்ககால பணிகள்:

இயேசு சபை சார்பில் முதலில் கொளை என்ற ஊரில் குருவாக நியமிக்கப்பட்டார் அதன்பின் காவிரி டெல்டா மற்றும் கொள்ளிடம் ஆற்றங்கரையில் சிறப்புற ஊழியம் செய்தவராக இருந்தார். 1679,1680 இல் அழைப்பின் பேரில் வடக்கன் குளத்திற்கு வந்து நற்செய்தி அறிவித்தார். 1685 இல் காமநாயக்கன்பட்டி யில் குருவானவராக சிறப்புற பணி செய்தார். தென் தமிழகத்தில் உட்பகுதிகளில் தூய சவேரியார் அவர்களால் ஓரளவு நற்செய்தி கேட்ட மக்களுக்கு சிறப்பாக நற்செய்தியை அறிவித்து காமநாயக்கன்பட்டி, கயத்தாறு, வடக்கன்குளம் போன்ற கிராமங்களில் கிறிஸ்தவ சபைகளை மிக அருமையாக வளர்ச்சி அடையச்செய்தார்.

அக்காலத்து சூழ்நிலையும் தென் தமிழ்நாட்டின் அரசியல் சமூக சிக்கல்களும் இவர் போர்த்துக்கல் நாட்டிற்கும் அந்நாட்டு அரசருக்கும் இயேசு சபை தலைமை இடத்திற்கும் ஏசு சபை மண்டல அதிபருக்கும் அனுப்பிய கடிதங்கள் மூலம் அறிய முடிகிறது அவை வரலாற்று பூர்வ சான்றுகளாக இன்று வரை உள்ளன.

மறவ நாட்டிற்கு நற்செய்திப் பணி

தூய அருளானந்தரின் நோக்கம் அக்காலத்தில் நற்செய்திக்கு தடையாக இருந்த மறவ நாட்டில் நற்செய்தி அறிவிக்கப்பட வேண்டும் என்பதாக இருந்தது. அதற்காக ரத்த சாட்சியாக (மறை சாட்சியாக) மரித்தாலும் கவலை இல்லை என்ற உணர்வோடு மிகதைரியமாக சேதுபதி அரசரின் கட்டளையை மீறி நற்செய்தி அறிவித்து சிறப்பானதொரு பணியை அவர் செய்து வந்தார். ராமநாதபுரம் சேதுபதி அரச பரம்பரையைச் சார்ந்த தடியத் தேவரின் மனமாற்றம். ஜான் டி பிரிட்டோ வின் ரத்த சாட்சி மரணத்திற்கு உடனடி காரணமாக இருந்த இந்த சம்பவத்தை சுருக்கமாக பார்ப்போம். ராமநாதபுரம் அரச உரிமைக்காக கிழவன் சேதுபதிக்கு போட்டியாக நின்றவர் தடியத் தேவர் அவர்கள். அவரது உடலில் இருந்த தொழுநோய் அவரை மிகவும் வேதனைப் படுத்தி வந்தது மருந்துகளை உட்கொண்டும் தைலங்கள் பூசியும் அது சிறிதளவும் குணமாகவில்லை மேன் மேலும் அதிகரித்துக்கொண்டே வந்தது. தூய அருளானந்தர் அவர்கள் தொலைவிலிருந்து செய்த ஜெபத்தாலும் அருளானந்தர் அவர்களால் தடிய தேவரின் தொழு நோய்க்கு ஜெபிக்க அனுப்பப்பட்ட உபதேசியார் குழு ஜெப நீர், ஜெப எண்ணெய் கொண்டு சென்று கொடுத்து வேத வசனங்களை கூறி ஜெபித்ததன் மூலமும் மிக விரைவில் முழுமையாக குணமடைந்தார் அவர் கிறிஸ்துவராக மாறினார்.

தடியத்தேவரின் செயலும் கிழவன் சேதுபதியின் கோபமும்:

கிறிஸ்து மார்க்கத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு இருப்பதை போதனைகள் மூலம் அறிந்து கொண்டதால் ஐந்து மனைவிகளை திருமணம் செய்திருந்த தடியத் தேவர் முதல் மனைவியை மட்டும் தமது வாழ்க்கை துணைவியாக வைத்துவிட்டு பிறரை அவரவருடைய இல்லங்களுக்கு அனுப்பி வைத்து விட்டார். அவ்வாறு அனுப்பப்பட்ட நால்வரில் ஐந்தாவது மனைவி கடலாயி கிழவன் சேதுபதியின் அக்கா மகள் ஆவார். ராமநாதபுரம் அரசு உரிமைச் சட்டப்படி அந்த பதவிக்கு வர வேண்டிய உரிமை உள்ளவர்களில் தடியத்தேவரும் ஒருவர் ஏற்கனவேஅரசுரிமை போட்டி காரணமாகவும் அக்கா மகளை வாழாவெட்டியாக அனுப்பி வைத்ததன் காரணமாக தடியத்தேவர் மீது பகைமை கொண்டிருந்த கிழவன் சேதுபதியின் கோபம் அவருக்கு நற்செய்தி அறிவித்த தூய அருளானந்தர் மீது வேகமாய் திரும்பியது. இதற்கு சேதுபதி மன்னரின் திவான் குமாரப்ப பிள்ளையும் முழுகாரணமாக இருந்தார். தூய அருளானந்தரை சிரச்சேதம் செய்து கழுவேற்றும் ஆணையைப் பிறப்பித்த கிழவன் சேதுபதி அதை நிறைவேற்றும் படி ஓரியூரை மையமாகக்கொண்ட மறவ நாட்டின் எல்லைப் பகுதிகளை கவனித்து வந்த தனது தம்பி சிற்றரசர் உடையத் தேவருக்கு ரகசியமாக ஓலை அனுப்பினார். தடிய தேவர் ஏதேனும் புரட்சி செய்து விடக்கூடாது என்பதற்காக தூய. அருளானந்தரை மறவநாட்டைவிட்டு வெளியேற்றுவதாக ஒரு தோற்றத்தை ஏற்படுத்தி விட்டு ஓரியூரில் தூய அருளானந்தரை சிரச்சேதம் செய்யும்படி தமது தம்பிக்கு மறைமுகமாக ஆணையிட்டார்.

தூய அருளானந்தரின் இரத்தசாட்சி மரணம்:

தூய அருளானந்தர் அவர்களின் ரத்த சாட்சி நாளுக்கு முந்தின நாள் அவர் இயேசு சபை மண்டல அதிபர் லெயினஸ் அடிகளாருக்கு எழுதிய கடிதம் கண்ணீரை வரவழைக்கிறது தாம் இதுவரை பட்ட பாடுகள் பாடுகளின் மத்தியிலும் சிற்றரசனாக இருந்த உடையத் தேவருக்கு நற்செய்தி அறிவித்த காரியம் மறவநாட்டில் அவர் செய்துள்ள பணிகள் எல்லாவற்றையும் நினைவுகூர்ந்து 03.02 .1693 ஆம் நாள் ஓரியூர் சிறைச்சாலையில் இருந்து அந்தக் கடிதம் எழுதப்பட்டிருந்தது. 04.02.1693 அன்று உடையத்தேவரின் கையாளாக இருந்த பெருமாள் குடும்பன் என்பவரால் தூய அருளானந்தரின் தலை வெட்டப்பட்டு பின் அவர் கழுவேற்றப்பட்டார். இந்த நிகழ்வு தமிழ்நாடு மட்டுமல்ல ஐரோப்பா எங்கும் அதிர்வலைகளை ஏற்படுத்தியது. ஏனென்றால் இயேசு சபை போதகர்கள் மூலம் ஐரோப்பாவிலும் உலகமெங்கிலும் இந்த ரத்த சாட்சி மரண தகவல் பரவியது. ஜான் டி பிரிட்டோ அவர்களின் ரத்த சாட்சி மரணம் ராமநாதபுரம் அரண்மனையிலும் அதிர்வலைகளை ஏற்படுத்தியது அநேக துர்ச் சம்பவங்கள் அரண்மனையாரின்

குடும்பத்தில் நடைபெற ஆரம்பித்தது என்றும் ஜான் டி பிரிட்டோ அவர்களுக்கு தமது முன்னோர் செய்த பாவச் செயல் அவர்களை வாட்டி வதைத்தது என்றும் ஆதலால் கிழவன் சேதுபதிக்கு பின் வந்த மன்னர்கள் ஜான் டி பிரிட்டோ அவர்கள் ரத்த சாட்சியாக மரணமடைந்த பகுதி முழுவதையும் கத்தோலிக்கத் திருச்சபைக்கு எழுதிக் கொடுத்துவிட்டார்கள். என்பதை அறிய முடிகிறது. இன்று அப்பகுதியில் மிகச் சிறப்பானதொரு தேவாலயமும் அநேக சிற்றாலயங்களும் அமைக்கப்பட்டுள்ளது.

ஜான் டி பிரிட்டோ அவர்கள் மரணமடைந்து அவருடைய இரத்தம் சிந்தப்பட்ட இடத்தில் மட்டும் மணல் செம்மண் ஆக மாறி உள்ளது ஆதலால் செம்மண் புனிதர் என்று அவர் அழைக்கப்படுகிறார் அங்கு பிற இடங்களில் உள்ள மண் மஞ்சள்மணல் ஆகவே உள்ளது. ஜான் டி பிரிட்டோ போன்ற உயிருள்ள இரத்த சாட்சிகள் தென் தமிழகத்திற்கு ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் வழியாய் ஆசீர்வாதத்தை கொடுத்துள்ளார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை.

# பாடுகளின் மத்தியில் வளர்ந்த திருச்சிராப்பள்ளி அருட்பணி

அருள்திரு இர்வின் ஞானமுத்து,
தஞ்சாவூர்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் 'சிரா' என்ற சமண முனிவர் மலைக்கோட்டையில் தங்கியிருந்த பள்ளி அல்லது இடம் சிராப்பள்ளி என அழைக்கப் பெற்றது. இதுவே திருச்சிராப்பள்ளி என பெயர்பெற்றது.

1757-ஆம் ஆண்டு தஞ்சாவூருக்குப் போன கோலாப்பையர் அங்கிருந்து திருச்சிராப்பள்ளிக்குப் போனாரென்பது மெய்யேயாயினும், திருச்சிராப்பள்ளியில் சுவிசேஷத்திற்கு 1750-ஆம் வருஷம் வழி திறந்தது சோதிநாயக்கன் என்னும் ஒரு சிப்பாயின் முயற்சியால் என்று சொல்வது நியாயம். ரோமான் மார்க்கத்தை அனுசரித்திருந்த இவர்தரங்கை ஐயர்மார் பிரசுரித்திருந்த பக்தி நூல்களை வாசித்து, சுத்த சுவிசேஷத்தின் அறிவைப் பெற்றார். இவர் நமது சபையில் சேர்ந்து உபதேசியாராகி திருச்சிராப்பள்ளி யிலிருந்த தமது பந்துக்களுக்கும் புறமதஸ்தருக்கும் சுவிசேஷத்தை அறிவிக்கத் தொடங்கினார். பிற்பாடு இவரோடு தேவநேசன், இன்னாசிமுத்து என்ற உபதேசிமாரும் பக்தி வைராக்கியத்துடன் வேலை செய்தார்கள். இதனால் அவ்வரில் உண்டான நல்ல சபையைக் குறித்துக் கேள்விப்பட்ட தரங்கை குருமாரில் தாமே (Dame) என்ற ஐயரே (1751) முதல் முதல் திருச்சிராப்பள்ளிக்குப் போய் சந்தித்து, சுவிசேஷம் பிரசங்கித்தவர். அவர் இச்சமயத்தில் அங்கிருந்த ஜெர்மானியர்களுக்குப் பிரயோசனமாக ஜனங்களைச் ஆராதனை நடத்தி, கர்த்தருடைய இராப்போஜனம் பரிமாறினார்.

இவருக்குப் பின், 1751 ஆம் அவர் சென்னைப் பட்டணத்திற்குப் போய்த் திரும்பி வந்து, 1752 ஆம் ஆண்டு தஞ்சாவூருக்குப் போன சுவார்ச்சையரும் கிளைன் ஐயரும் திருச்சிராப்பள்ளிக்குப் போனார்கள். அங்கேயே வாசஞ் செய்து மிசியோன் வேலை செய்வதனால் பெரும்பயன் விளையுமென்று கண்ட சுவார்ச்சையர் கிளைன் ஐயரைத் தரங்கைக்கு அனுப்பி விட்டு, தாம் திருச்சியில் நிலைத்திருந்தார் அவர் திருச்சியைத் தமது வேலைக்கு மத்திய ஸ்தானமாக்கி அங்கிருந்த ஐரோப்பியபட்டாளத்தாருடைய ஆத்மரட்சிப்புக்காக மிகவும் கவலைப்பட்டு, மேஜர் பிராஸ் தன் முதலிய துரை மக்களின் உதவியால் ஒரு ஜெபவீடும் பள்ளிக்கூடமும் கட்டுவித்தார், சில மாதக்காலத்திற்குள் அநேக இந்துக்களும், ரோமானித்தாரும் அவரால் சுவிசேஷ சபையில் சேர்க்கப்பட்டார்கள்.

1703-ஆம் வருடம் ஜனவரி அவர் கருவருக்குப் போய் இந்துக்களுக்குச் சுவிசேஷம் அறிவித்து வந்தார். மார்ச் மாதம் தஞ்சைக்குப் போயிருக்கையில் திருச்சிராப்பள்ளி மருந்து கிடங்கு பற்றிக்கொண்டது. மாண்டவர்கள் தெய்வபயமுள்ள மூன்று ஐரோப்பியர் உள்பட 18 பேர். இந்த செய்தி கேள்விப்பட்டவுடனே அவர் திரும்பிவந்து, அங்கிருந்த போர்ச் சேவகருக்கும் மற்றோருக்கும் மத். 13:4-5-இன் பேரில் பிரசங்கித்தார். இறந்து போனவர்களின் பிள்ளைகளின் ஆதரிப்புக்காக ஐரோப்பியரிடத்தில் 330 வராகன் தண்டல் செய்து, ஆதரிப்புச் சாலையொன்றை ஸ்தாபித்தார்.

திருச்சிராப்பள்ளியை ஆண்டுவந்த நவாபும் அவருடைய பிரதான மந்திரியும் சுவார்ச்சையரோடு விசேஷித்த நட்புக் கொண்டாடி வந்தார்கள். அவர்களுக்கு ஐயர் கிறிஸ்துவைக் குறித்து அடிக்கடி அறிவித்து வந்தார். அக்காலத்தில் உண்டான கொடிய பஞ்சத்தில் அவர் ஏழைகளுக்குச் செய்த உபகாரம் மிகுதி, அவருக்குப் பொளுதவி செய்யக்கூடிய பிரஸ்தன் முதலிய தர்மதுரைகளும் ஊரில் இல்லாதிருந்ததால் அவருக்குப்பண முட்டு அதிகமாயிருந்தது. அவர்கள் நவாபுக்கு விரோதமாய்க் கலகம் செய்த முகமது ஈசப் என்பவனை அடக்க மதுரைக்குச் சேனை தளவாடங்களுடன் போயிருந்தார்கள். மதுரை முற்றுகை நாள்பட இருந்தமையால் நோயாளிகள் காயப்பட்டவர்களின் தொகை அதிகரித்தது. இதினிமித்தம் மேற்கூறிய துரைமார் சுவார்ச்சையரை அங்கே அழைப்பித்தார்கள் (1754-ஆம்) அவர் அங்கே சுமார் 500 பேர்கள் சாயப்பட்டிருக்கக் கண்டார் நாற்றம் சகிக்கக்கூடாததாகயிருந்தும், அவர் உற்சாகமாய் அவர்களுக்கு ஆறுதலும் எச்சரிப்புமான வசனங்களைச் சொல்லி வந்தார். சூன் 27-ஆம் தேதி பிரஸ்தன் துரையும் காயப்பட்டு, சில வாரங்களுக்குப் பின் மரித்தார். சுவார்ச்சையர் வியாதிப்பட்டு, வேலை செய்யக்கூடாமல், ஆகஸ்டு 6-ஆம் தேதி திருச்சிக்குத் திரும்பி, சில காலத்திற்குப் பின் சுகமடைந்தார். அக்டோபர் மதுரை பிடிக்கப்பட்டது

சுவார்ச்சையர் பட்டாளத்திற்கு செய்த வேலைக்காக நவாபு இனாமாக கொடுத்த 500 வராகனை அவர் எடுத்துக்கொள்ளாமல், திருச்சி மியோனுக்கும் யுத்தத்தில் உயிர் போன ஸ்தாபித்த

பாடசாலைக்கும் உபயோகப்படுத்தினார். சில காலத்திற்குப் பின் நவாபு அப்பாடசாலைக்காக 300 வராகன் கொடுத்தார். பிறகு சுவார்ச்சையர் 2000 வராகன் போல் தண்டல் செய்து திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் ஒரு பெரிய கோயிலைக் கட்டினார், அதற்கு 1755-ஆம் மார்ச்-13 அஸ்திபாரம் போடப்பட்டு பெந்தேகொஸ்தே பண்டிகையில் பிரதிஷ்டை செய்து, அதற்கு கிறிஸ்தாலையம் எனப் பெயரிட்டார்

சு. அ. வி சங்கத்தார் திருச்சிராப்பள்ளியில் செலவில் இரு மிசியோனை ஸ்தாபிக்க விரும்பி, கோப்பதனிலிருந்த ஆலோசனைச் தங்கள் சங்கத்தாருக்கு S. P. C. K எழுதி, அவர்கள் அனுமதி பெற்று, மிசியோனாரியாக சுவார்ச்சையரை அவர் சம்மதத்தின் பேரில் நியமித்துக் கொண்டார்கள். ஹைதர் அலி இங்கிலீஷ்காரரோடு 1759-ஆம் மூன்ற மாதக்காலம் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் போர்புரிந்தார். அப்போரில் காயப்பட்ட இங்கிலீஷ் போர்ச் சேவகருக்குச் சுவார்ச்சையர் சுவிசேஷத்தைக் கொண்டு ஆறுதல் சொல்லி வந்தார்.

1770ஆம் அவர் பிரயாசத்தால் அநேக இந்துக்கள் ஞானஸ்நானம் பெற்றனர். அப்பொழுது ஞானஸ்நானம் பெற்றவர்களில் வாலிபனாகிய பண்டாரமொருவன் (of a Pandaram] விசேஷித்தவன். அவன் ஒருநாள் சுவார்ச் ஐயரைக் காவேரி ஆற்றோரத்தில் கண்டு: நான் ஏழு வருஷகாலமாய் ஸ்தலயாத்திரை, தீர்த்த யாத்திரை செய்து பேர் போன கோயில்களைத் தரிசித்து, கீர்த்தி பெற்ற நதிகளில் மூழ்கியும், என் ஆத்துமத்திற்கு யாதொரு ஆறுதலும் கிடைக்கவில்லை. இந்துக்களின் பஜா விதிகளைப் பற்றி எனக்குச் சந்தேக மெழும்புகிறது. ரோமான் மார்க்கத்தான் ஒருவன் எனக்குப் பித்தளைச் சிலுவையொன்றைக் கொடுத்தான். அதை நான் போகுமிடங்களிலெல்லாம் கொண்டு போய் வணங்கி வந்தேன். நான் இன்றைக்கு ஆற்றோரத்தினின்று ஸ்ரீரங்கத்திலுள்ள கோயிலைப் பார்த்த போது: அதெல்லாமென்ன, அவைகளினாலென்ன பிரயோசன மென்றெண்ணிக் கொண்டிருக்குங்கால் உமது உபதேசியார் என்னைக் கண்டு எனக்குக் கிறிஸ்துமார்க்கத்தைக் குறித்துச் சொன்னார் உமது உபதேசஞ் செய்யும் நன்மை இன்னதென்பதை நான் இப்போது பார்க்க வேண்டியது. நான் இந்து மதத்தில் பார்த்ததிலும் விசேஷித்தவைகளைக் கிறிஸ்து மார்க்கத்தில் பார்த்தால் நான் உடனே கிறிஸ்து மத அனுசாரியாவேன் என்றான் அவன் ஐயர் தனக்குச் சொன்ன யோசனையைக் கேட்டு, ஒவ்வொரு நாளும் ஞான உபதேசம் படித்தவர்களோடு சேர்ந்து, அவர்களுக்குச் சொல்லப்பட்ட புத்திமதிகளைக் கவனித்து வந்தான். கடைசியில் பண்டார உடைகளையும் ருத்திராட்சதாவடத்தையும் நீக்கி விட்டு, அதிக ஜாக்கிரதையோடு படித்து ஐயர் தமது வேலைக்காரர்களோடு செய்யும் காலை மாலை ஜெபங்களுக்குக் கிரமமாய் வந்து கொண்டிருந்தான். இரு இங்கிலீஷ் துரை அவனைக் குறித்து சுவார்ச்சையருக்கு: அவன் ஈடுச்சாமத்திலெழுந்து ஜெபம் செய்ததை நான் சில தருணங்களிற் கேட்டேனென்று சொன்னார் அவன் ஞானஸ்நானத்தில் ஞானப்பிரகாசம் என்னும் பெயர் பெற்று, சுவார்ச்சையரால் உபதேசியாராக்கப்பட்டு, தன் மரணபரியந்தம் அவருக்குப் பிரியமாயிருந்து, சில வருஷங்களுக்குப் பின் மரித்தான். 1772-ஆம் திருச்சிராப்பள்ளியில் மருந்துக் கிடங்கு பற்றிக்கொண்டதால் ஐரோப்பியரும் சுதேசிகளுமான அநேகர் உயிர்ச்சேதமடைந்தார்கள், அநேகர் காயப்பட்டார்கள். வெடி மருந்துடன் துப்பாக்கித் தோட்டாக்களும் குண்டுகளும் ஆகாசத்திலெழும்பி, ஆலங்கட்டி போல் விழுந்தன. ஐயர்வீட்டின் ஜன்னல்களும் உடைபட்டு அநேக குண்டுகள் ஐயரின் அறையில் அவரருகேவிழுந்தும், கர்த்தருடைய கிருபையால் அவர் சேதமின்றித் தற்காக்கப்பட்டார்.

அந்த வருஷம் சுவார்ச்சையரின் பிரயாசத்தால் ஞானஸ்நானம் பெற்றவர்களில் நாம் கவனிக்கத்தக்க மூன்று முக்கிய பேர்கள் உண்டு: இருவர் பெயர் சத்தியநாதன். இந்துவாயிருக்கையில் இவருக்கு கற்பகம் என்கிற பெயர் இருந்தது. பிறகு சத்தியாதன் சுவார்ச்சையருக்கு உகந்தவரும் மியோனுக்கு மிகவும் பிரயோசனமான உபதேசியாரும், திருநெல்வேலி ஜில்லாவிலும் மற்றும் இடங்களிலும் வெகுவாய் உழைத்தார் மற்றோருவர் பெயர் அபிஷேகநாதன், வாலிபரான இவர் சமயபுரமென்ற இடத்தில் சுவார்ச்சையர் பிரசங்கத்தைக் கேட்டதால், கிறிஸ்துமார்க்கத்திற் சேர விரும்பி, திருச்சிராப்பள்ளிக்கு வந்து, ஐயரோடிருந்து உபதேசம் கேட்டு வருகையில், மருந்து கிடங்கில் அக்கினி பற்றி கொண்டது. இதனால் சுவர் இடித்து அந்த வாலிபன் மேல் விழுந்து மூடிப் போட்டதுமன்றி பிணங்கள் அவன் மேல்விழுந்து கிடந்தன, மறுநாள் அவரை வைத்தியசாலைக் கொண்டு போனார்கள், வைத்தியர்: அவன் இறந்து போவது நிச்சயம் என்று கூறினார். ஆகிலும், 4 மாத காலத்தில் அவர் சுகப்பட்டு மேற்கூறிய விபத்து, ஐயருக்குத் தெரியாமல் தான் திருச்சிராப்பள்ளியை விட்டுத் தன்பாருக்குப் போகவேண்டுமென்றிருகையில், நடந்ததென்றும், அது தன்பாவத்திற்காக வந்த தண்டனையென்றும் அறிக்கை விட்டு, தெய்வ கிருபையைப் புகழ்ந்து ஞானஸ்நானம் பெற்று இவரும் உபதேசியார் வேலைசெய்தார்.

மூன்றாவது இராயப்பன் என்ற வயோதிபர் 100 வயதுள்ளவராயிருந்த இவர் ஞானஸ்நானம் பெற விரும்பி, ஆயத்த போதனைகளைச் சரியாய்க் கற்று அனலாய் ஜெபித்து வந்தார். அவர் சிலதினங்களுக்குப் பின் வியாதிப்பட்ட போது தான் இயேசுநாதரை விசுவாசிக்கிறபடியால் ஞானஸ்நானம் பெறாமல் சாக எனக்குப் பிரியமில்லையென்று தெரிவித்து, அதைப் பெற்றுக் கொண்டார். அவர் சாகச் சமீபமாயிருக்கிற போது ஐயரைப்பார்த்து: ஐயரே, நான் இப்போது பாதீசுக்குப் போகிறேன்? வயதுள்ள என் பெண்சாதியும் அங்கே வந்து சேரும்படி பிரயாசப்படுங்கள் என்று சொல்லி, உடனே இறந்து போனார் அவரை வெகு சிறப்பாய் அடக்கம் பண்ணினார்கள். அவர் விரும்பியபடி அவர் மனைவியும் கிறிஸ்தவளாகி பக்தியுள்ளவளாய் விளங்கி, சுவார்ச்சையரிடத்தில் நல்ல பெயர் வாங்கினாள்.

1777-ஆம் வருஷத்துவக்கத்தில் தரங்கம்பாடிக்கு வந்த போலே ஐயர் அவ்வருஷ முடிவில் திருச்சிராப்பள்ளிக்கு அனுப்பப்பட்டு, அங்கே நாற்பது வருஷகாலம் பயனுறவேலை செய்தார் அடுத்த 1773-ம் ஆண்டு சுவார்ச்சையர் பாளையங்கோட்டைக்குப் போய் அங்கே மிசியோனை ஸ்தாபித்து, திரும்பிய பின் போலே ஐயருக்குத் திருச்சிராப்பள்ளிச் சபையை ஒப்புவித்து விட்டுத் தஞ்சாவூருக்கு வந்து குடியேறினார்.

# திருநெல்வேலி மிஷன் ஊழியத்தில் இரத்த சாட்சிகள்

**திருநெல்வேலி மிஷன் ஊழியம் திருநெல்வேலி, தென்காசி, தூத்துக்குடி, விருதுநகர், ராமநாதபுரம் மாவட்டங்களையும், கம்பம் பள்ளத்தாக்குப் பகுதியையும் உள்ளடக்கியது.**

அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்,
கீதாநகர் (தூத்துக்குடி - நாசரேத் திருமண்டலம்)

**முதல் இரத்தசாட்சி - சுவி. தாவீது சுந்தரானந்தம்:**

தாவீது சுந்தரானந்தத்தின் இயற்பெயர் சின்னமுத்து. இவர் சாத்தான்குளம் அருகிலுள்ள காலன்குடி என்ற சிற்றூரைச் சேர்ந்தவர். சிறுவயதிலேயே பெற்றோரை இழந்ததினால் தாய்மாமா வீட்டில் விஜயராமபுரத்தில் வளர்ந்தார். சின்னமுத்துவின் செயல்கள் அத்தைக்குப் பிடிக்கவில்லை. அத்தை தயிர் கடையும் மத்தால் அடித்ததினால் வீட்டை விட்டு வெளியேறி கருப்பட்டி ஏற்றிச்சென்ற வண்டி பின்னால் இராஜபாளையம் சென்றார். அங்கு கடையில் வேலை செய்தார். அங்கிருந்து தஞ்சாவூர் சென்று அங்கே கடைகளில் வேலை செய்யும்போது அருள்திரு.C.F.சுவாட்ஸ் ஐயரின் தொடர்பு மூலம் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு தாவீது சுந்தரானந்தம் என்று ஞானஸ்நானம் பெற்றார், சபை ஊழியர் பயிற்சி பெற்றார். திருநெல்வேலிப் பகுதியில் குறிப்பிட்ட இனத்தவர்கள் அதிகமாக இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டதினால் திருநெல்வேலிப் பகுதியைச் சேர்ந்த தாவீது சுந்தரானந்தத்தை தன் சொந்த மக்கள் மத்தியில் நற்செய்தி பணி செய்யும்படி அனுப்பினார்.

விஜயராமபுரத்திற்கு சென்று நற்செய்தியை அறிவித்தார். இனத்தவர்கள் இயேசுவை ஏற்றுக்கொண்டனர். பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார். சிறு ஆலயத்தையும் கட்டினார். எதிர்ப்புகள் பெருகியது. ஆலயம் இரண்டு முறை எதிரிகளால் தீக்கிரையாக்கப்பட்டது. எனவே எதிரிகளால் துன்புறுத்தப்படும் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தலில்லாமல் வாழும்படி கிறிஸ்தவர்கள் குடியிருப்பதற்கு என்று தனி குடியேற்றத்தை உருவாக்க முயற்சி செய்தார். சிலருடைய உதவியினால் சாத்தான்குளம் அருகிலுள்ள அடையல் கிராமத்தின் அருகில் இடத்தை விலைக்கு வாங்கி துன்புறுத்தப்பட்ட கிறிஸ்தவர்களை அங்கு குடியமர்த்தி 1799ம் ஆண்டு அந்த கிராமத்துக்கு முதலூர் என்று பெயரிட்டார். இதுவே தமிழ்நாட்டின் முதல் கிறிஸ்தவ கிராமம்.

முதலூரின் சபை ஊழியராகவும் பணி செய்தார். கிறிஸ்தவம் சுற்றுக்கிராமங்கள் முழுவதும் இவர் மூலமாக வேகமாகப் பரவியது. கிறிஸ்தவம் பரவுவதை விரும்பாத ஜமீன்தார்கள், நிலக் கிழார்கள், உயர் இனத்தவர் என்று தங்களை சொல்லிக்கொள்ளுகிறவர்கள் முதலூரையே வந்து தாக்கினார்கள். முதலூர் ஆலயத்தையும் தீயிட்டு கொளுத்தினார்கள். தாவீதால் அநீதியைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. தன் மக்களைக் கொடுமையிலிருந்து காக்க வேண்டும் என்று தாவீது எண்ணினார். முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும் என்று எண்ணின தாவீது தடிக்கம்புக்காரர் என்ற கிறிஸ்தவ இளைஞர் குழுவை ஆரம்பித்தார். எங்கெல்லாம் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டனரோ அங்கு தடிக்கம்புக்காரர் சென்று கிறிஸ்தவர்களுக்கு பாதுகாப்பு அளித்து விட்டு திரும்புவர். சுற்றுப்புறத்தில் இருந்த கிறிஸ்தவரல்லாத மற்ற மதத்தினர் தாவீதின் இந்த தடிக்கம்புக்காரர் குழுவிற்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினர். அவரைக் கொல்வதற்கும் வகை தேடினர். 1806ம் ஆண்டு பெத்லகேம் என்ற ஊரில் தாவீது இறந்து கிடந்தார். குட்டம் கிராமத்து மக்கள் தாவீதுக்கு உணவில் விஷம் கலந்து கொடுத்தனர். அதன் விளைவாக அவர் இறந்தார். நம் மண்ணில் இருந்து கிறிஸ்துவுக்காய் எழுந்த மற்றும் வீழ்ந்த முதல் வித்து தாவீது சுந்தரானந்தம் என்பது மறக்க முடியாத உண்மை .

**இரண்டாவது இரத்த சாட்சி - நம்பியம்மாள்:**

திருவைகுண்டத்திற்கு கிழக்கில் திருப்புளியங்குடி என்ற சிறு கிராமம் உள்ளது. அவ்வூரில் நம்பி என்ற அறுபது வயது முதியவர் குடும்பமாக வாழ்ந்தார். இவருடைய மூத்த மகன் பலவேசம், இளைய மகன் சின்ன பலவேசம், கடைசி மகன் சுப்பிரமணியன். சுப்பிரமணியன் 1818ம் ஆண்டிலேயே பாளையங்கோட்டையில் றீஹணளீலு சபையைச் சேர்ந்த உபதேசியார் தெருப்பிரசங்கம் செய்வதைக் கேட்டு இயேசு கிறிஸ்துவை அறிந்தார்.

விக்கிரக வணக்கத்தை வெறுத்தார். உள்ளூர் பூசாரி திருநீறு பூச வரும்பொழுது அதைப் பெற்றுக்கொள்ள மறுத்தார். ஆனால் கிறிஸ்துவைப் பற்றி மேலும் அறிந்து கொள்வதற்கு எந்த வாய்ப்பும் இல்லாத சூழ்நிலையில் பாளையங்கோட்டைக்கு சென்றார். CMS மிஷனெரி நெல்லை அப்போஸ்தலன் அருள்திரு.C.T.E.ரேனியஸ் ஐயரை சந்தித்தார். அவரும் குடும்பத்தினரும் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டனர். சுப்பிரமணியனை செமினரியில் மாணவனாக சேர்த்தார். திருப்புளியங்குடியில் மேலும் பலர் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டனர். ரேனியஸ் ஐயர் அங்கு 1823ம் ஆண்டு ஜூலை மாதம் ஆலயத்தைக் கட்டி மாசிலாமணி உபதேசியாரை நியமித்தார். திருப்புளியங்குடியிலுள்ள மற்ற இனத்தவர்கள் கிறிஸ்தவர்களுக்கு எதிராக செயல்பட்டார்கள். ஒரு நாள் எதிரிகள் பலத்த ஆயுதங்களுடன் நம்பியின் வீட்டிற்கு இரவில் வந்தனர். பகைவர்கள் கோபம் மிஞ்சி இரக்கமின்றி நம்பியின் குடும்பத்தினரை அடித்து துன்புறுத்தினர். நம்பியின் மனைவியான மூதாட்டி அன்றடைந்த காயங்களின் காரணமாக மரித்தார். இவரே திருநெல்வேலி திருச்சபையின் இரண்டாவது இரத்த சாட்சி. முதல் பெண் இரத்த சாட்சி.

**மூன்றாவது இரத்த சாட்சி - அருளூர் பேதுரு:**

பேய்க்குளம் அருகிலுள்ள செம்பொன் குடியிருப்பில் அருள்திரு C.T.E.ரேனியஸ் ஐயர் மற்றும் தாவீது சபை ஊழியர், செமினரி மாணவர்கள் மூலம் நற்செய்தி அறிவிக்கப்பட்டு பலர் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டனர். அவ்வூரின் பிராமண தன்வந்தர்

கிறிஸ்தவர்கள் குடியிருப்பதற்காக தன்னுடைய இடத்தை இலவசமாக கொடுத்தார். ரேனியஸ் ஐயர் செம்பொன் குடியிருப்பு கிறிஸ்தவர்களை அவ்விடத்தில் குடியமர்த்தி கடவுளின் அருள் எப்பொழுதும் கிடைக்கவேண்டுமென்று ஆசித்து அதற்கு அருளூர் என்று பெயரிட்டார் (23.10.1823).

செம்பொன் குடியிருப்பில் பழனியப்ப பிள்ளை என்றவருக்கு இது பிடிக்கவில்லை. அவர் அங்கு குடியேறிய கிறிஸ்தவர்களை மிகவும் துன்புறுத்தினார். அருளூர் கிறிஸ்தவர்களுக்கு விரோதிகள் அந்நாட்களில் இழைத்த தீமைகளுக்கு அளவே இல்லை. சாத்தான்குளம் மிஷனெரி ஷ்மிட் ஐயர் அருளூர் சபையை அடிக்கடி சந்தித்து உற்சாகப்படுத்தினார். அருளூர் சபையின் தலைவராக அவ்வூரைச் சேர்ந்த பேதுரு மிக உற்சாகமாக செயல்பட்டார். 1824ல் அருளூரில் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார் ரேனியஸ் ஐயர். ஆனாலும் துன்பம் கொஞ்சமும் குறையவில்லை. அருளூர் மக்கள் அடைந்து வந்த உபத்திரவங்களுக்கு முடிவே இல்லாதது போல் தோன்றியது. ரேனியஸ் ஐயர் அதுபற்றி மிகவும் கவலைப்பட்டார். செம்பொன் குடியிருப்பில் பழனியப்ப பிள்ளைக்கு மிகவும் பயங்கரமான எதிரியாக கருதப்பட்டவர் அருளூர் சபை தலைவரான பேதுரு வேதமுத்து. இவர் சற்று கல்வியறிவு உடையவர். மக்களுக்கு துன்பம் உண்டாயிருந்த நாட்களில் ஆறுதல் சொல்லி, தேற்றி தன்னால் இயன்ற ஒத்தாசைகளை செய்து வந்தவர். எனவே, பழனியப்ப பிள்ளை பேதுருவுக்கு அதிகம் துன்பங்களை கொடுத்தார். அடிக்கடி பேதுருவின் வீடு தீக்கிரையாகும். மகசூல்கள் கொள்ளைபோகும். பனைகள் வேரோறு சாய்க்கப்படும். அவர்மீது பொய் வழக்குகள் போடப்படும். இவையெல்லாவற்றிலும் பேதுருவும், அவருடைய குடும்பத்தாரும் கிறிஸ்துவுக்குள் நிலைத்திருந்தனர். இதனால் பழனியப்ப பிள்ளையும் அவரது ஆட்களும் இனியும் பேதுருவை விட்டு வைப்பது கூடாதென்று தீர்மானித்தனர். அக்டோபர் மாதம் முதலாம் தேதி காலையில் பேதுருவை அவருடைய வீட்டிலிருந்து இழுத்து அங்கேயே அடித்துக் கொன்றார்கள். அவர் கீழே விழுந்ததும் பழனியப்பன் அவரை உதைத்து மிதித்தான். பேதுருவின் உதவிக்குச் சென்ற கிறிஸ்தவர்களும் அடிக்கப் பட்டார்கள். அவருடைய தாயாரின் தலையிலடித்துப் பெரியதொரு காயத்தையுண்டாக்கினார்கள் பகைவர். பேதுரு அவ்விடத்திலே இரத்த சாட்சியாக மரித்தார். இவரே திருநெல்வேலி திருச்சபையின் மூன்றாவது இரத்த சாட்சி.

---

# மணியக்காரன்பட்டிக்கு கோதுமை மணியாக மரித்த அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர்

Rev.G.P.இராஜா
மணியக்காரன்பட்டி குருசேகரம்

இந்தியாவில் குறிப்பாக தென் தமிழகத்தில் நற்செய்தி பணியை செய்ய அமெரிக்க மிஷன் மற்றும் லண்டன் மிஷன் ஊழியர்களால் நற்செய்தி பணியை செய்ய அநேக மிஷனரிகள் அர்ப்பணிக்கப்பட்டு புறப்பட்டு வந்தார்கள். குறிப்பாக தமிழ்நாட்டில் மதுரையிலும், மதுரையை சுற்றியுள்ள பகுதிகளில் நற்செய்தி பணியை செய்ய மதுரை அமெரிக்க மிஷன் 1834 ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. மதுரை மட்டும் அல்ல அதைச்சுற்றியுள்ள திண்டுக்கல், தேனி, பெரியகுளம், வத்தலக்குண்டு, உத்தமபாளையம், கோம்பை, ஆணைமலையான்பட்டி, கம்பம், போடி, சின்னமனூர், ஆண்டிபட்டி போன்ற பகுதிகளில் பெரிய முயற்சியால் நற்செய்தி பணி பரவியது. 1850ஆம் ஆண்டில் மணியக்காரன்பட்டியில் அருள்திரு. ஜார்ஜ் போர்ட் என்ற மிஷனரினால் நற்செய்தி அறிவிக்கப்பட்டு திருச்சபை உருவானது. அவரைத் தொடர்ந்து அநேக மிஷனரிகள் தங்களுக்கு கொடுக்கப்பட்ட நற்செய்தி பணியை உண்மையோடு கடவுளுடைய நாமம் மகிமைப்படும்படி செய்தார்கள். குறிப்பாக மணியக்காரன்பட்டி திருச்சபையின் வளர்ச்சி பணிக்கு வித்திட்டவர் அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் என்பவர் ஆவார். இவர் அமெரிக்கா நாட்டில் பாஸ்சன் என்ற நகரில் 1835ம் ஆண்டு அக்டோபர் 27ம் தேதி பிறந்தார். சிறுவயதில் தன்னுடைய பெற்றோர்கள் கர்த்தருடைய வேத வசனத்தில் வளர்த்தார்கள். டேவிட் காயிட் ஸ்கடர் அவர்களும் வேதத்திலும், ஜெபத்திலும், ஆலயப்பணிகளிலும், ஊழியத்திலும் அதிக ஆர்வம் கொண்டவராக திகழ்ந்தார். தன்னுடைய இளம் வயதில் இந்தியாவில் நற்செய்தி பணி செய்ய அர்ப்பணிப்போடு பயணத்தை தொடர்ந்தார். அருள்திரு. டேவிட் காயிட் ஸ்கடர் அவர்கள் பெரியகுளம் பகுதியை மையமாக வைத்து செய்த பணியை தன் மிஷன் சங்கத்துடன் இணைந்து செய்ய ஆரம்பித்தார். அதைத்தொடர்ந்து இன்றைய தேனி மாவட்டம், ஆண்டிபட்டிக்கு அருகிலுள்ள மணியக்காரன்பட்டி கிராமத்தில் 1860ஆம் ஆண்டிலே நற்செய்தி பணியைத் தொடர்ந்தார். பெரியகுளம் பகுதியில் தங்கி நற்செய்தி பணி செய்யும் போது, அவ்வப்போது மணியக்காரன்பட்டிக்கு வந்து மக்களை சந்தித்து, தொடர்ந்து நற்செய்தி பணியை செய்து வந்தார். அப்படி ஒருநாள் மணிக்காரன்பட்டியை சந்தித்தப்பிறகு மீண்டும் பெரியகுளத்தில் இருக்கின்ற தன்னுடைய பங்களாவிற்கு போகும் வழியில் வைகை அணையை கடக்க வேண்டும். அந்த வேளையில்தான் வைகை அணையில் வெள்ளம் அதிகமாக சென்றது. எப்படியாவது வைகையை கடக்க வேண்டும் என்று நினைத்து நீச்சல் அடித்து சென்றார். ஆனால் வைகையில் அதிகமான வெள்ளம் சுழன்று சுழன்று வந்ததாலும் நீச்சல் அடிக்க முடியாமல் வெள்ளத்தில் அடித்து செல்லப்பட்டார். அன்றைய தினம் அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் அவர்களுக்கு இறுதிநாளாக அமைந்தது. தன்னுடைய உயிரை வைகை வெள்ளத்திலே கடவுளுக்கு அர்ப்பணித்து நற்செய்தி பணிக்காக மணியக்காரன்பட்டி திருச்சபை மக்களுக்காகவும், இன்றைய தேனி மாவட்டத்தில் இருக்கின்ற மக்களுக்காகவும் இரத்தச்சாட்சியாக 1862ம் ஆண்டு நவம்பர் 19ம் தேதி கோதுமை மணியாக கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். இவருடைய உடல் இரண்டு நாட்களுக்கு பிறகு மதுரை மாவட்டம் சோழவந்தான் பகுதியில் ஒரு கரையோரம் ஒதுங்கப்பட்டு அவரது உடல் கண்டெடுக்கப்பட்டது. பின்பு அவரது

உடல் கொடைக்கனல் அமெரிக்க மிஷன் கல்லறைத்தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் என்ற மிஷனரி நற்செய்தி பணிக்காக இரத்தச்சாட்சியாக மரித்தார். அவர் மரிக்கும்போது அவருடைய குழந்தைக்கு 9 மாதங்கள் மட்டுமே ஆனது, தன்னுடைய மனைவியையும், தன் குழந்தையும் விட்டு கர்த்தருக்காக கோதுமை மணியாக மரித்தார்.

இவரைத் தொடர்ந்து பல மிஷனரிகளும், ஊழியர்களும் இந்த பகுதியில் நற்செய்தி பணியைத் தொடர்ந்தார்கள். மணியக்காரன்பட்டி திருச்சபை அதிக வளர்ச்சிகளை கண்டது. பல ஆண்டுகளை கண்ட இந்த திருச்சபை 2011 ஆம் ஆண்டு மே மாதம் 1ம் தேதி நடைபெற்ற நிறைவான நிகழ்வு விடுமுறை வேதாகம பள்ளியின் முதல் நாள் என்பது குறிப்பிடத்தக்கது. அடுத்த நாள் 2ம் தேதி புதிய ஆலயம் கட்ட பழைய ஆலயம் இடிக்கப்பட்டது. இந்த ஆலயத்தை இடிக்கவும், அதைத்தொடர்ந்து புதிய ஆலயம் கட்டவும் ஜெபிக்க விடுமுறை வேதாகமப்பள்ளியின் இயக்குனராக வந்த அடியேனுக்கு கிடைத்ததை நினைத்து கடவுளுக்கு நன்றிகளை ஏறெடுக்கின்றேன். 2011 ம் ஆண்டு வரை ஆண்டிபட்டி குருசேகரத்துடன் இணைந்திருந்தது. முதன்முதலாக 2012ம் ஆண்டில் தனி குருசேகரமாக மாறி வளர்ச்சியைப்பெற்றது. இந்த குருசேகரம் வளர்ச்சி பெறுவதற்கு அருள்திரு.ஜான் துரைப்பண்டி(குருசேகர தலைவர் மற்றும் வட்டகை மன்ற தலைவர்) ஆவார். இவருடன் இணைந்து உதவி குருவானவராக ஜான் ஜோசுவா அவர்களும் இணைந்து உழைத்திருக்கின்றார்கள். இந்த குருசேகரத்தின் முதல் குருவானவர் அருள்திரு.ஜான்சன் சாமுவேல் ஏசுதாஸ் அவர்கள். இவர் ஆலயத்தை முழுமையாகவும், புதுமையாக கொண்டுவர அதிக உழைப்பை கொண்டு வந்தவர் என்பது குறிப்பிடதக்கவர். இவருடைய குருத்துவப்பணியில் இரத்தச்சாட்சியாகவும், கோதுமை மணியாகவும் மரித்த அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் என்ற மிஷனரியின் நினைவாக இந்த ஆலயத்தை 2013ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 19ம் தேதி அருட்பெருந்திரு.முனைவர்.M.ஜோசப் (CSI.மதுரை-முகவை திருமண்டிலத்தின் பேராயர்) அவர்களால் மங்களப்படைப்பு செய்யப்பட்டது. அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் என்பவரின் வரலாற்றையும், மக்களுக்கு விழிப்புணர்வுகளையும், மிஷனரியின் அர்ப்பணிப்புகளையும் திருச்சபை மக்களுக்கு சவால் நிறைந்த அறைகூவலை எடுத்து கூறியதில் அதிக பங்கு அருள்திரு.ஜான்சன் சாமுவேல் ஏசுதாஸ் அவர்களையே சேரும். இவருடன் இணைந்து திரு.S.M.ராஜா, திரு.J.பவுலஸ், திரு.- J.மணிக்கராஜ், திரு.M.செல்வநாயகம் மற்றும் அனைத்து திருச்சபை மக்களும், குருசேகர உறுப்பினர்களும், வட்டகை மன்ற தலைவர் அருள்திரு.D.துரைப்பாண்டியன் அவர்களும் இரத்த சாட்சியாக மரித்த அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் அவர்களுக்கான நினைவு ஆலயத்தை கட்டி முடித்தார்கள். அதனைத்தொடர்ந்து இரண்டாவது மிஷனரி தாகத்தோடு வந்த குருவானவர் அருள்திரு.A.ஜெயக்குமார் அவர்களும் ஒரு ஆண்டு பணிகளை தொடர்ந்தார். இவரும் சமீபத்தில் மாரடைப்பால் கர்த்தருக்குள் மரித்தார். இந்த திருச்சபையில் இன்றும் ஜெபிக்கும் போது அற்புதங்களையும், அதிசயங்களையும் மக்களுக்கு கொடுக்கின்ற திருச்சபையாக அமைகின்றது. ஒவ்வொரு ஆண்டும் வருடத்தில் முதல் தேதியில் சிலுவைக்கொடியேற்ற திருவிழா சிறப்பாக நடைபெறும். அந்த வேளையில் நூற்றுக்கணக்கான பிற நம்பிக்கையுள்ள மக்களும், அநேக கிறிஸ்தவர்களும் கலந்துக்கொண்டு நன்மைகளை பெற்றுக்கொள்கின்றார்கள். 170 ஆண்டுகளை கடத்த இந்த திருச்சபையில் அருள்திரு.டேவிட் காயிட் ஸ்கடர் அவர்களின் இரத்த சாட்சியின் குரல் இன்றும் பேசிக்கொண்டேயிருக்கின்றது. இந்த திருச்சபையில் மூன்றாவது குருவானவராக இறைப்பணியை குடும்பமாக செய்ய அடியேனுக்கு கிடைத்ததை நினைத்து கடவுளுக்கு நன்றிகளையும், துதிகளையும் ஏறெடுக்கின்றேன்.





# தோமா

## இந்தியாவில் முதல் இரத்தசாட்சி

அருள்திரு முனைவர் ச. இராஜசேகரன்



"கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும், செத்ததேயாகில் மிகுந்த பலனைக்கொடுக்கும்" (யோவான் 12:24) என்று இயேசு இரத்த சாட்சியின் மரணத்தின் மேன்மையையும் அதன் மகத்தான விளைவுகளையும் பற்றி இங்கே குறிப்பிடுகிறார். அம்மரணத்தை அவர் சந்தித்தார். இலத்தீன் கிறிஸ்தவத்தின் தகப்பன் என்றும் மேற்கத்திய இறையியலை தோற்றுவித்தவர் என்றும் அறியப்பட்ட தெர்த்துளியன் 'இரத்த சாட்சிகளின் மரணம் திருச்சபையின் வித்து' என்றார். கிறிஸ்தவம் இயேசுவின் இரத்தத்தின் வித்தில் பிறந்து உலகமெங்கும் பல்வேறு விதங்களில் பல்வேறு வகைகளில் வளர்ந்துகொண்டிருக்கிறது: கிறிஸ்தவம் என்னும் மரணத்தின் அனைத்து கிளைகளுக்கும் வேராக இருப்பது இயேசுவின் இரத்தம். அதுவே மனித குலத்தின் சகல பாவங்களையும் நீக்கி சுத்திகரிக்கிறது. இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை என்னும் சத்தியம் இன்றும் நிலைநாட்டப்படுகிறது. அந்த இரத்தம் மிருகங்களுடையதோ அல்லது மனிதர்களுடையதோ அல்ல: தேவஆட்டுக்குட்டியான இயேசுவின் இரத்தமேயாகும். இயேசுவின் மகிமையான இரத்தத்திற்கு சாட்சியாக அவரை கண்டும், கேட்டும், அனுபவித்தும் அனைத்து சந்தேகங்களும் நீக்கப்பெற்ற தோமா அந்த மகிமையின் அழைப்பிற்கு இணங்கி அதிக தூரத்திற்கு நற்செய்தியை கொண்டு சென்றவர். அவர் இந்தியாவில் இயேசுவின் முதல் இரத்தசாட்சி. அவருடைய சாட்சியான ஊழிய வாழ்வையும் இரத்தசாட்சியின் மரணத்தையும் சந்தேகிப்போர் அதிகம் காரணம் அவருடைய ஊழியத்தின் விளைவுகள் தமிழ் கலாச்சாரம், மொழி மற்றும் பண்பாடோடு ஒன்றித்து இருப்பதை ஒருசில மிஷனரிகளும் இன்றைய கிறிஸ்தவர்களும் கண்டனர். அதை நாமும் காண்போம்.

### இயேசுவுடன்கூட மரிக்க அழைத்த தோமா

'அவரோடேகூட மரிக்கும்படி நாமும் போவோம் வாருங்கள்' என்று மற்ற சீடர்களையும் அழைத்தவர் இந்த தோமா (யோவான் 11:16). லாசரு மரித்துவிட்டான் என்று கேள்விப்பட்டவுடன் அங்கே போவோம் வாருங்கள் என்று இயேசு அழைக்க, சீடர்களின் பிரதிநிதியாக தோமாவும் அழைக்க அவர்கள் பெத்தானியாவுக்கு போனார்கள். நான் போகிற இடத்தை அறிந்திருக்கிறீர்கள் என்று இயேசு சீடர்களிடம் சொன்னபோது "வழியை அறியோமே" என்று அங்கேயும் சீடர்களின் பிரதிநிதியாக கேட்க, அதற்கு இயேசு 'நானே வழியும்,வாய்மையும்,வாழ்வுமாய்இருக்கிறேன்' என்றார்(யோவான் 14:4-6). கிறிஸ்தவ நம்பிக்கையின் அடித்தள நம்பிக்கையான இக்கூற்றை இயேசுவிடமிருந்து வெளிக்கொண்டுவரும் பெரும் ஆயுதமாக இருந்தவர் தோமா. கடவுளின் திவ்ய வெளிப்பாட்டிற்கு தோமாவைப் போல நாமும் ஒரு காரணராயிருக்கவேண்டும். தோமா தெளிவாயிருக்க விரும்புகிறவர். தெளிவு தைரியத்தைக் கொடுக்கிறது. ஆதாயம் அதன் நோக்கத்திற்காக தியாகத்தை செய்யத்துணியும். அத்துணிவே அவரை இரத்தசாட்சியாக்கியது. ஒரு கோழை மற்றவர்களைதைரியப்படுத்த முடியாது ஆனால் ஒரு தைரியசாலி அநேகரை தைரியப்படுத்தக்கூடும். இயேசு உயிர்த்தெழுந்ததை அறிந்த சீடர்கள் யூதர்களுக்குப் பயந்ததால் கதவைப்பூட்டிக்கொண்டு இருந்தார்கள், ஆனால் தோமா அவர்களுடன் தன்னை பயந்தவனாகக் காட்டிக்கொள்ளாமல் அவர்களைவிட்டு போய்விட்டான். எங்கு போனான், எதற்காகப்போனான் என்ற விளக்கம் இல்லை ஆனால் பயந்தவர்களுடன் அவன் இல்லை என்பது தெளிவாகிறது (யோவான் 20:19,24). கிறிஸ்துவுக்காக தைரியமாய் வாழாதவர்கள் ஆதாயமாய் இரத்தசாட்சியாக மரிக்கமுடியாது. தைரியம் வார்த்தையில் அல்ல பகுத்தறிவில் - தெளிவில் உள்ளது. மோசே தெளிவடையும் வரை பொறுப்பை ஏற்கவில்லை, ஆனால் தெளிவுப்பெற்றவுடன் எடுத்துக்கொண்ட பொறுப்பை ஒருநாளும் கைவிடவில்லை. ஆகவேதான் 'என்னை விட்டுவிடு' என்று கேட்ட மோசேயிடம், கடவுள் 'என்னை விட்டுவிடு மோசே' என்று கேட்கிறார். இயேசுவோடு வாழமுடியாதவர் இயேசுவுக்காக வாழமுடியாது. இயேசுவுடன் மரிக்க ஆயத்தமாயிராதவர் இயேசுவுக்காக மரிக்கமுடியாது.

### இயேசுவுக்காக மரிக்க அர்ப்பணித்த தோமா

தோமா இந்தியாவிற்கு வந்தபோது ஏறக்குறைய தெற்காசிய நாடுகள் அனைத்தும் தமிழ் தேசம் என்று அறியப்பட்டிருந்தது. இங்கு சேர, சோழ மற்றும் பாண்டிய மன்னர்கள் ஒற்றுமையுடனும் மக்களை மிகவும் கண்ணியமாகவும் நடத்தி ஆட்சி செய்தார்கள். யூதர்களை கடவுள் சிதறடித்ததாலும், வணிக நோக்கத்தோடும் இப்பூமியில் வாழ்ந்து வந்தார்கள். நினைவுத்தூண்கள் அமைத்தும், மிருகங்களைப் பலியிட்டும் வழிபட்ட அவர்களுடைய வழிபாடுகள் தமிழ் தேசங்களில் பரவலாயிருந்தது. பலியிட்டு வழிபடும் வழிபாட்டிற்கு ஆரிய பிராமணர்கள் தங்களை

பூசாரிகளை ஏற்படுத்திக்கொண்டு தமிழ் மக்களை தொழில் மற்றும் நிறத்தின் அடிப்படையில் பிரித்து ஆட்சி செய்தனர். இதனை ஏற்றுக்கொள்ளாதவர்கள் மகாவீரர் மற்றும் புத்தர் தலைமையில் பலியையும், பலிகேட்கும் கடவுளையும் மறுத்து சமண மற்றும் பௌத்தக் கொள்கைளை வளர்த்து வந்தனர். பலிகொடுக்கவேண்டுமா பலிகொடுக்கவேண்டாமா என்ற குழப்பத்தில் இருந்த தமிழ் மக்களுக்கு அவர்களை அதிகம் நேசித்த கடவுள் அம்மக்களின் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்ற தெளிவுப் பெற்ற தோமாவை அங்கு அனுப்பினார். கடல் மார்க்கமாய் தற்போதுள்ள கேரளப் பகுதியில் தோமா வந்திறங்கினார் என்று அநேக இறையியல் வரலாறு ஆசிரியர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள்.

இங்கு அவர் ஒரு சுற்றுலா பயணியாக வராமல் இயேசுவின் அழைப்புக்கு ஏற்ப ஒருவன் தன் உயிரை வாழும்போதும், மரிக்கும்போதும் எனக்காகக் கொடுக்காவிட்டால் என்னுடைய சீடராகவோ சிநேகிதனாகவோ இருக்கமுடியாது (யோவான் 12:24-25, 15:13-15) என்று சொன்ன தெய்வ வாக்கை ஏற்று, அதன்படி தன் வாழ்வையும் உயிரையும் கொடுக்கவே தமிழ் தேசங்களுக்கு வந்தார். வந்திறங்கிய கடற்கரைப்பகுதி மக்களிடம் தமிழ் கற்றார். பலியை கடவுள்தான் கேட்டார் ஆனால் கேட்டவரே தன்னை பலியாக கொடுத்ததால் இனி பலி செலுத்தத்தேவையில்லை என்றும் அதற்கு மாறான சைவபலியை இயேசு காண்பித்ததுபோல காண்பித்து, பலியிடும் வழிபாட்டிற்கு பெரும் பாதிப்பை ஏற்படுத்தியதை 2000 ஆண்டுகளாக இன்றும் காணமுடிகிறது. அதனால் இந்தியாவில் பெரும்பாண்மையானவர்கள் கடவுளுக்கு அசைவ பலியை செலுத்தாமல் அதன் நிறைவேற்றத்திற்கு அடையாளமான சைவபலியையே செலுத்துவதே இதற்கு நல்லதொரு சான்று.

கல்வி மற்றும் செல்வத்தால் கல்லாதவர்களையும் ஏழைகளையும் தங்கள் வசப்படுத்தியிருந்த படித்தவர்களையும், உயர்குலத்தாரையும் சந்தித்து, அவர்கள் புரிந்துகொள்ளும் வகையில் நற்செய்தியை அவர்களுக்கு தெளிவுப்படுத்தினார். அதனால் அநேக நம்பூதிரிகள் மற்றும் பிராமணர்கள் இறைமகனின் சீடரானார்கள். கேரளப்பகுதியில் ஏழு திருச்சபைகளை ஏற்படுத்தியதாக வரலாறு கூறுகிறது. அத்துடன் திருவிதாங்கூரில் எருசலேம் தேவாலயம் போன்று ஒரு சிற்றாலயம் கட்டினார் என்றும் அதுவே உலகில் மிகப்பழமையான கோவில் என்றும் ஏற்கப்படுகிறது. கன்னியாக்குமரி பகுதியில் தனது ஊழியத்தை செய்துமுடித்தவராய் சென்னை மயிலாப்பூருக்கு செல்கிறார். அங்கும் பிராமணர்களுக்கு ஏற்ப திருமறையின் நற்செய்தியைப் போதிக்கிறார். இறைவன் இறைமகனாகப் பிறந்தார், அவர் மனிதர்களின் பாவத்திற்கான இரத்தபலியானார், அவரை நம்புகிறவர்கள் பாவத்திலிருந்து மீட்கப்படுவார்கள் என்றும் இனி மாமிச பலி அவசியம் இல்லை, அதற்கு பதில் அதை நினைவுகூறும் வகையில் சைவ அடையாளத்தை பின்பற்றவேண்டும் என்று, அவர் கண்டு, கேட்டு, தெளிவுப்பெற்ற சத்தியத்தை ஞானமாக அறிவித்தார். இயேசு மனிதர்களை மீட்க மனிதரானதுபோல பிராமணர்களுக்கு நற்செய்தி அறிவிக்க தோமாவும் ஒரு பிராமணரைப் போல மாறியிருக்கக்கூடும், மேலும் பலிநிறைவேறின செய்தியின் தாக்கத்தால் பெருமளவு மக்கள் மனமாற்றம் அடைந்ததால் பிராமணர்களின் வாழ்வாதாரத்தை பாதித்திருக்கும், அவை அவர்களைக் கோபப்படுத்தியிருக்கக்கூடும், அதனால் அவரை அவர்கள் ஈட்டியில் குத்தி கொலை செய்திருப்பார்கள். அவர் அறிவித்த நற்செய்தியை அவர் எழுதியிருக்கக்கூடும் என்பதை வெளிப்படுத்தவே அவருடைய படத்தில் ஈட்டியும் புத்தகமும் காணப்படுவதாகக்கொள்ளலாம். இப்படியாக தோமா இயேசுவுக்காக இரத்தசாட்சியாக மரித்தார்.

**இயேசுவைப்போல மரிக்க அழைக்கப்பட்ட தோமா**

தோமா இந்தியாவில் ஊழியம் செய்ய அவருக்கு இருந்த ஒரே முன்மாதிரி இயேசு மாத்திரமே. ஆகவே அவர் இயேசுவைப் போல யூதர்களுக்கு அவர்களுடைய வேதங்களிலிருந்தும், யூதல்லாதவர்களுக்கு கதைகள் அல்லது உவமைகள் மூலமும் பிரசங்கித்திருப்பார். இயேசுவை கடவுள் என்றும் ஆண்டவர் என்றும் அறிக்கையிட்டவர் தோமா மாத்திரமே. அதனடிப்படையில் இயேசுவை தேவனுடைய குமாரன் என்றும் அவரே கடவுளாக இருந்தார் என்றும் அறிவித்திருப்பார். கடவுள் மனித உருவில் பிறப்பதற்கு முன்பு மனிதப்பண்புகளை ஏற்றி வணங்கினர், ஆனால் மனிதனாகப் பிறந்தபின்பு, கடவுளின் முழுத்தன்மையையும் அவரில் கண்ட தோமா அவரை யெகோவா என்று அறிக்கையிட்டார். அதனை ஏற்றுக்கொண்ட இயேசு, நீ கண்டு நம்பியதால் அறிக்கையிடுகிறாய் ஆனால் உன் பேச்சைக் கேட்டு காணாமல் நம்புகிறவர்கள் உன்னைவிட பாக்கியவான்கள் என்று அவனை ஆசீர்வதிக்கிறார்.

'நான் என் ஜீவனை மறுபடியும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்கிறார்' (யோவான் 10:17) என்று இயேசு இந்த பூமிக்கு மனிதனாக பிறப்பதற்கு முன்பே திட்டமிடப்பட்ட இரத்தசாட்சி மரணத்தால், தான் மீண்டும் உயிர்பெறுவேன் என்ற நம்பிக்கையில் உயிர்கொடுத்தார் என்பதை அறிந்த தோமா, இயேசுவைப் போல முழுமையாக நம்பினால்தான் இயேசுவைப் போல வாழவும் மரிக்கவும் முடியும் என்பதையும் அறிந்திருந்தான். அவன் நம்புவதற்கான ஆதாரத்தை இயேசு கொடுத்து அவனையே இரத்தசாட்சிக்கும் உயிர்த்தெழுதலுக்கும் சான்றாக்கினார்.

கண்ணால் கண்ட சாட்சி தோமா அதனால் இயேசுவைப் போல தானும் மரிப்பதற்கு ஆயத்தமாக உலக அதிகாரங்களையும் விண்ணுல அந்தகாரங்களையும் எதிர்த்து நின்று அந்நிய தேசத்தில் இரத்தம் சிந்தி மரித்தார். அவருடைய இரத்தமாகிய வித்தால் இன்று இந்தியாவில் மட்டுமல்ல தெற்காசிய நாடுகள் அனைத்திலும் மதங்கள் கடந்து மிருகபலிகள் நிறுத்தப்பட்டு, அதற்கு பதிலாக சைவ பதார்த்தங்களை கடவுளுக்கு படைத்து உண்ணும் சமய பழக்கங்கள் உருவாகியிருக்கிறது. இவ்வழிபாட்டு முறை சமண மற்றும் பௌத்த சமயத்தை தழுவியது என்றால், கடவுள் நம்பிக்கையோ அல்லது சைவ பதார்த்தங்களை வழிபாட்டில் பயன்படுத்தும் முறையோ வந்திருக்காது. இன்று சமண பௌத்தர்களே இந்தியாவில் பெரும்பாண்மையாயிருப்பார்கள். ஆனால் கடவுள் நம்பிக்கை இல்லாத அவர்கள் பலியிடாததற்கு காரணம் உயிரினங்கள் மேல் உள்ள பரிதாபமேயொழிய 'கொன்றால் பாவம், கொன்றதை தின்றால் தீரும்' என்னும் பலி இறையியல் தத்துவம் அல்ல. இந்தியாவிற்கு இந்த பலிநிறைவேற்ற தத்துவத்தை கொண்டுவந்தது தோமாதான். அதை மறுக்கும் வேறு வரலாற்று ஆதாரங்கள் இந்தியாவில் இல்லை. சமயத்தவைர்கள் உயர் வகுப்பினர்கள் இயேசுவைக் கொலை செய்தது போலவே தோமாவும் இந்தியாவில் அவர்களால்

கொலை செய்யப்பட்டார்.

'ஐரோப்பியாவின் பல நாடுகள் கிறிஸ்தவத்தை அறியும் முன்பே புனித தோமா இந்தியாவிற்கு வருகை புரிந்தார் என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும். பல ஐரோப்பிய நாடுகளின் கிறிஸ்தவர்களுக்கும் முந்தைய நீண்ட வரலாறு புனித தோமா வழி வந்த இந்திய கிறிஸ்தவர்களுக்கு உண்டு. இது உண்மையிலேயே நாம் பெருமை கொள்ளத்தக்க செய்தியாகும்.' என்று இந்தியாவின் முதல் குடியரசு தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் அவர்கள் 1995 ஆம் ஆண்டு டிசம்பர் 18ம் தேதி அன்று புதுடெல்லியில் புனித தோமா தினம் கொண்டாடப்பட்டபோது கூறினார். அத்துடன் 'முதல் நூற்றாண்டில் 30 லட்சம் கிறிஸ்தவர்கள் இந்தியாவில் இருந்தார்கள்' என்று விவேகானந்தர் ஞானதீபத்தில் (சுடர் 1, பக்கம் 409)ல் எழுதியிருக்கிறார். இதனை ஜவஹர்களால் நேரு, டாக்டர் இராதா கிருஷ்ணன் மற்றும் டாக்டர் அம்பேத்கார் போன்ற இந்திய அறிஞர்கள் வழிமொழிகிறார்கள். தோமாவின் வருகையை இந்தியாவிற்கு ஏறக்குறை 1400 ஆண்டுகள் கழித்து வந்த வெள்ளைக்காரர்கள் சந்தேகிக்கிறார்கள். ஆனால் இந்தியாவில் ஜனாதிபதி முதல் சாதாரண பாமரர்கள் வரை தோமாவின் வருகையை ஆதரிப்பதுடன் தோமா இரத்தசாட்சியாக மரித்த மலையை தோமா மலை என்று அழைக்கிறார்கள். தோமா எங்கள் நாட்டில் மரித்தார் என்றோ அவருடைய கல்லறை இங்கே இருக்கிறது என்றோ எந்த நாட்டவரும் இதுவரை உரிமைக்கோரவில்லை. தோமாவின் உருவபடத்தை இந்திய தபால் தலையில் இரண்டு முறை (1964 மற்றும் 1973) வெளியிட்டு அவரைக் கௌரவப்படுத்தியிருக்கிறார்கள். தோமா இந்தியாவிற்கு வந்து ஊழியம் செய்து தன் இரத்தத்தை சிந்தியிருக்காவிட்டால் ஜாதி மற்றும் வகுப்பு அடிப்படையில் மேல் வர்க்கத்தினர் கீழ்வர்க்கத்தினரை கடவுளுக்கு பலி என்ற பெயரில் கொலை செய்வதால் இன்று இரத்த ஆறுதான் ஓடிக்கொண்டிருக்கின்றது.



# வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர் மூவர்

ந. ஜான் ஜெயானந்தம்
சென்னை

கடந்த பதிவின் தொடர்ச்சி..

கிறிஸ்தியான் பரமசிவம் ஞானமணி அவர்கள், கடந்த கட்டுரையில் கண்ட வச்சிரமணி கிறிஸ்தியான் அவர்களின் மூத்த மகன் ஆவார்.

'அன்பே பிரதானம்' கீர்த்தனைப் புகழ் சி.பி. ஞானமணி அவர்கள் இன்றைய நெல்லை மாவட்டத்தில் உள்ள கிருபாபுரம் என்ற இடத்தில் 1868 ஆம் ஆண்டு மே மாதம் 29-ஆம் தேதி பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் நான்கு ஆண்களும், நான்கு பெண்களும் ஆவர். கவிவன்மை மிக்க இவரது இன்பக் கீர்த்தனைகள் நான்கு இன்று தமிழ்க் கிறித்தவ மக்கள் மத்தியில் பெரிதும் விரும்பிப் பாடப்பட்டு வருகிறது.

இறைபணிக்கு இறை அழைப்பைப் பெறுமுன்னர் உதகமண்டலத்திலுள்ள கெய்ட்டி என்ற இடத்தில் அமைந்துள்ள பேசில் மிஷன் பயிற்சிப் பள்ளியில் ஆசிரியர் பணியாற்றினார். அச்சமயத்தில் 1895-ஆம் ஆண்டு 'இலக்கண சிந்தாமணி' என்ற இலக்கண நூலை மாணவர்களுக்காக எழுதினார். தாம் இறைபணி ஆற்றிய 22 ஆண்டுகளில் பல சிற்றிலக்கியங்களையும்.. இறை உணர்வைத் தூண்டும் பொருள் ஆழம் மிக்க இனியக் கீர்த்தனைகள் பலவற்றையும் படைத்துள்ளார். இவருக்கு ஆண்மக்கள் மூவரும், பெண்மக்கள் நால்வர் ஆவர். இவர் இனிய பண்புகள் கொண்டவர்; இசையில் வல்லுநர். இனிமையாகப் பாடி அனைவரையும் கவரக்கூடியவர்.

ஒரு சுவையான நிகழ்ச்சி அவர் வாழ்வில் நடந்த சுவையான நிகழ்ச்சி ஒன்று அவருடைய பக்தியையும், கர்த்தர் இயேசு கிறிஸ்துவின் மேல் அவர் கொண்டிருந்த விசுவாச உறுதியையும், தைரியத்தையும் எடுத்துக்காட்டுகிறது.

அந்நாட்களில் அருகில் உள்ள ஊர்களுக்கு இறைபணிக்கு மாடுகள் பூட்டிய கூண்டு வண்டியில் அவர் பயணம் செய்வது வழக்கம். ஒருநாள் அவ்வாறு சென்று வீடு திரும்புகையில், பாதைக்கு அருகில் சுமார் 300 அடி தூரத்தில் அமைந்திருந்த ஓர் இந்து ஆலயத்தில் கோடைத்திருவிழா நடந்து கொண்டிருந்தது. அச்சமயம், ஐயரவர்கள் வண்டியில் இருந்தே ஜெபித்துவிட்டு, சிலுவை அடையாளத்தை ஆகாயத்தில் வரைந்து விட்டுச் சென்றிருக்கிறார். (இவ்வாறு சிலுவை அடையாளத்தைப் பாரம்பரிய கிறிஸ்தவத் திருச்சபைகளின் குருமார்கள், ஆலய வழிபாடுகளில் வரைதல் தொடரும் ஒரு வழக்கமாயுள்ளது.) இதை வழியில் சென்றவர்கள் சிலர் கவனித்துள்ளனர். அச்சமயத்தில் அந்த இந்து ஆலயத்தில் திடீரெனத் தீப்பிடித்து, பெரிய விபத்து நேரிடவே, திருவிழாக் கொண்டாடிய மக்கள் மிகுந்த பீதி அடைந்தனர். அக்கூட்டத்தில் இருந்த ஒருவர், அவ்வழியாகக் கடந்து சென்ற கிறிஸ்தவப் பாதிரியார் ஏதோ மந்திரம் போட்டுச் சென்றதால் தான் இந்தத் தீ விபத்து ஏற்பட்டுள்ளதென்று கூற, மக்கள் கொதிப்படைந்தனர். அவர்கள் ஆவேசம் கொண்டு பல ஆயுதங்களுடன் திரண்டு ஐயரவரின் வீட்டுக்கு வந்து வெறித்தனமாகக் கதவைத்தட்டி, பாதிரியாரை வெளியே வரும்படி மிரட்டினார்கள். அச்சமயம் வீடு திரும்பிய ஐயரவர்கள் உணவருந்தி நாற்காலியில்அமர்ந்து ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தார். அவர் எழுந்து வாசலுக்குச் செல்வதை அவருடைய மனைவியார் வெகுவாகத் தடுத்து நிறுத்த முயன்றும், அவர் மறுத்து, கதவைத் திறந்து முன்வந்து, அந்த வெறிகொண்ட கூட்டத்தை மிகுந்த தைரியத்துடன் எதிர்கொண்டார்.

அப்பொழுது அவர்கள், சற்று நேரத்திற்கு முன்னர் தங்களது திருக்கோவில் வழியாகக் கடந்து வண்டியில் வரும்போது, அவர் ஏதோ மந்திரம் ஏவிவிட்டு வந்ததனாலேயே தங்களுடைய கோவில் இப்பொழுது தீப்பிடித்து விட்டது என்றும், இதனால் அவரைக்கொலை செய்ய வந்தோமென்றும் கூறினர். ஐயரவர்கள் சாந்தமாக, தாம் தம்முடைய ஆண்டவர் இயேசு கிறிஸ்துவை நினைத்து ஜெபித்துக் கொண்டு வந்ததாகவும், அவர்களுக்கு விரோதமாக எவ்வித மந்திரமும் செய்யவில்லையென்பதாகவும், அமைதியாக உறுதியுடன் எடுத்துரைத்தார். ஆயினும், கூட்டத்தார் பாதிரியாரைக் கொன்றுவிடப் போவதாகக் கோஷமிட்டனர். பாதிரியாரோ எவ்விதப் பதற்றமுமில்லாது, அப்படியானால் தடையின்றி என்னைக் கொலை செய்யலாம் எனக்கூறி, அக்கூட்டத்தாருக்கு முன்னர் குனிந்து நின்றார். அச்சமயம் அக்கூட்டத்தில் இருந்த ஒரு பெரியவர் கூட்டத்தாரைப் பார்த்து, 'இந்த மகான் மீது கை போடாதீர்கள். இவர் மந்திரம் போட்டதனால் நம் ஆலயமே எரிந்து விட்டது. இவருக்கு நாம் தீமை செய்தால் நாம் அனைவரும் அழிந்தே போவோம்' என்று கூற, கோபமடைந்து வெறி கொண்டிருந்த கூட்டத்தார். இதைக்கேட்டு ஒருவாறு அமைதியடைந்தனர். அப்பொழுது போதகர், கிறிஸ்துவைப் பற்றியும் அவர் பாவமுள்ள மனிதர்களாகிய நமக்குப் பாராட்டியுள்ள அன்பைக் குறித்தும் விளக்கிக்கூறி, அவருடைய சிலுவை மரணத்தின் மூலம் நாம் அடையும் நித்திய இரட்சிப்பைப் பற்றி எடுத்துக்கூறினார். இயேசு கிறிஸ்துவே மெய்யான தேவன் என்பதையும் அவர் உறுதிபடக் கூறினார். இதைக்கேட்ட அம்மக்கள் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். அச்சம்பவத்தின் மூலம்

பின்னர் ஒரு சிலர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை அறிந்து கொள்ள வழியுண்டாயிற்று.

**குடும்பமும் இறுதி முடிவும்**

ஞானமணி ஐயரவர்களின் மரணம் அகால மரணம் என்றே கூற வேண்டும். அவர் வாழ்ந்த காலத்தில், இன்று போல் வைத்திய வசதிகள் இல்லை. அவர் சென்னையிலிருந்து திருச்சிக்கு மாற்றலாகி ஓர் ஆண்டு முடிவதற்குள், தம் 54-ஆம் வயதில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவர் மூல வியாதியில் (Septic Piles) அதிகமான அவதியுற்று, இரத்த இழப்புடையவராக உடல் நலம் வெகுவாகக் குன்றிய நிலையில் இருந்தார். அவர் படுக்கையில் படுத்துத் தாம் எப்பொழுதும் கையில் வைத்திருக்கும் பனையோலை விசிறியினால் விசிறிக் கொண்டிருந்தார். சபையாரில் சிலர் அச்சமயம் அவரைக் காண வந்திருந்தனர். திடீரென அவர் கையிலிருந்த விசிறி கீழே விழ, அவர் ஆவி கர்த்தரிடம் சென்றது. அச்சமயத்தில் அவர் மனைவியார், 'இனி நான் என்ன செய்வேன்?' என்று கூறிக் கதறி அழுததாகச் சொல்லப்படுகிறது. அச்சமயம் ஐயா அவர்களுக்கு மூன்று சிறு பெண் மக்கள் இருந்தனர். மேரி சோபியா என்று அழைக்கப்பட்ட மகளுக்கு அப்பொழுது ஒன்பது வயது. மற்ற தங்கைமார்கள் சிறு குழந்தைகளாயிருந்தனர். ஆயினும் கர்த்தருக்குப் பயந்து அவரைச் சேவித்து வந்தவர்களின் சந்ததி ஒருபோதும் கைவிடப்படுவதில்லை என்ற வேதவாக்கு அன்னாரது குடும்பத்தில் முழுமையாக நிறைவேறியுள்ளது (சங்கீதம் 34:9; 37:25, 26; 112:2).

இவ்வாறு சுமார் 23 ஆண்டுகள் இறைபணியாற்றிய ஐயரவர்கள் 1922-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 22-ஆம் நாள் கர்த்தரிடம் சென்றடைந்தார். திருச்சி புத்தூர், சகல பரிசுத்தவான்கள் ஆலயத்தைச் சேர்ந்த சபையார் அன்னாருக்கு ஆலயத்தில் ஒரு நினைவுக்கல்லைப் பதித்துள்ளனர். கல்லறைத் தோட்டத்தில் நாட்டப்பட்டுள்ள கல்லில், அன்னாருடைய ஊழியச் சிறப்பைக் குறிப்பிட்டு, நல்லதொரு நினைவுச் சின்னம் எழுப்பியுள்ளனர். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமம் என்றென்றும் உயர்த்தப்படுவதாக!

**சங்கை சி.பி . ஞானமணி அவர்களின் நற்குணப்பண்புகள்:**

ஞானமணி அவர்கள் தம் குடும்பத்தாரை மிக அன்புடன் பராமரிக்கும் தன்மையர், பொதுவாக வச்சிரமணி குடும்ப வழித்தோன்றல்களிடம் இப்பண்பு எடுப்பாகவே காணப்படுகிறது. மிகுந்த பாசத்துடன் தம் குடும்பத்தாரையும், சபையாரையும் நடத்தி, தேவையான உதவிகளைச் செய்து வந்தார். அவர் முதலூரில் பணியாற்றிய நாட்களில் முதலூரைச் சுற்றிலும் பெரிய கொள்ளை நோய் பரவிப் பலரது உயிர்களைப் பலிகொண்டது. அச்சமயம் ஞானமணி அவர்கள் ஊரைத் தூய்மையாக்கும் நற்பணியை மேற்கொண்டு, கொள்ளை நோய் பரவாது தடுத்தார். இவ்வாறு அவர் ஆன்மீகப் பணியுடன், நல்ல சமுதாய சேவையும் செய்து வந்தார். இது அவருடைய இளகிய மனப்பான்மையைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது.

சில சமயங்களில் அவருடைய பேச்சும், செயல்களும் அதிக நகைச்சுவையாகக் காணப்படும். ஒரு சமயம் ஏதோ ஒரு காரியத்தினிமித்தம் ஐயரவர்களின் மனைவி அதிகக் கோபத்துடனிருந்தார்கள். அச்சமயம் வீட்டின் முன் அறையில்



அவர்கள் ஏதோ வேலையிலிருந்தார்கள். அப்பொழுது ஐயரவர்கள் தன் வயலினை எடுத்துக்கொண்டு வேகமாக ஓடும் ஓர் இராகத்தை வாசித்துக் கொண்டே, அந்த அறையின் சுவர் ஓரமாகத் தானும் வேகமாகச் சுற்றிச் சுற்றி வந்தார்களாம். இச்செயலைக் கண்ட மனைவியார் கோபம் தணிந்து வாய்விட்டுச் சிரித்து விட்டார்களாம். நம் கவிமணி உரமான மன உறுதியும் நல்ல தைரியமும் உடைய இனிய இறை பக்தர்.

**சி.பி. ஞானமணி அவர்களின் இறைப்பணி:**

ஞானமணி அவர்கள் சென்னை இராயப்பேட்டையில் C.M.S மிஷனெரிகள் நடத்தி வந்த திருமறைப் பள்ளியில் சேர்ந்து 1900 - ஆம் ஆண்டு L.Th., (Licentiate in Theology) கடவுட் கொள்கை விளக்கத் தொழிலுரிமைப் பட்டம் பெற்றார். 1900 ஆம் ஆண்டு, 32-ஆம் வயதில், அவருக்குத் திருநெல்வேலியில் குருப்பட்டம் கொடுக்கப்பட்டது. தமக்குத் திருமணமான பின்னரே, அவர் தம்மை இறைப்பணிக்கு ஒப்புவித்துள்ளார் என்று இதனால் அறியலாம். அவர் தெளிவாக தேவ அழைப்பைப் பெற்றவராகவும் அவ்அழைப்புக்கு தன்னை முற்றிலும் அர்ப்பணித்தவராகவும் இருந்தார். பிற்காலத்தில் அவர் ஆற்றிய இறைபணியும், புனைந்துள்ள பாடல்களும், அதனால் உண்டான ஆவிக்குரிய பயனும் இதை நமக்கு உறுதி செய்கின்றன. இங்கிலாந்துத் திருச்சபையில், திருநெல்வேலியில் பேராயராகப் பணியாற்றிய F.J. Western என்பார் எழுதியுள்ள 'Register of Tirunelvely



Clergy 1776 - 1936' என்ற புத்தகத்தின் மூலம் ஞானமணி ஐயரவர்கள் 1900-ஆம் ஆண்டு குருப்பட்டம் பெற்ற விவரத்தையும் அவர் திருச்சபைப் போதகராகச் சிறப்புறப் பணியாற்றிய விவரங்களையும் அறிந்து கொள்கிறோம். இவ்விரங்கள் திருச்சிராப்பள்ளி புத்தூரிலுள்ள அவருடைய கல்லறையில் நிறுவப்பட்டுள்ள கல்வெட்டிலும் பதிவாகியிருக்கின்றன.

நீலகிரி குன்னூர் தூய யோவான் ஆலயம் 1900-04
முதலூர், தூய மிகாவேல் ஆலயம் 1904 - 06
தூத்துக்குடி, தூய பாட்டிரிக் ஆலயம் 1906-09
போலரம், தித்துவ ஆலயம் 1909 -10
செக்கிந்திராபாத்து, தூய தோமா ஆலயம் 1910-12
சென்னை மயிலாப்பூர், நல்மேய்ப்பர் ஆலயம் 1912-13
சென்னை வேப்பேரி, தூய பவுல் ஆலயம் 1913-22
திருச்சி புத்தூர், சகல பரிசுத்தவான்கள் ஆலயம் 1922

சங்கை சி.பி. ஞானமணி அவர்கள் முதலூரில் பணியாற்றியபோது ஆலயத்தைச் சுற்றியிருக்கும் முட்புதர்களை அகற்றி, அழகிய ஆலய வளாகத்திற்கு வழியமைத்தார். சபையாரின் ஒத்துழைப்புடன் ஆலயக் கோட்டைச் சுவரும், இரும்பாலான வாயிற்கதவும் அமைக்கப்பட்டன. முன் வளாகத்தில் அழகிய தோட்டம் உருவாக்கப்பட்டது. இவ்விவரங்கள் கலைஞர் திரு.குருபாதம் அண்ணாவியவர்கள் எழுதிய பாடலில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

அருளுரை வல்லோர்

இவர் தம்முடைய சபையாரின் வாழ்க்கையில் காணும் குறைகளையும், தவறுகளையும் நேரிடையாகச் சுட்டிக் காட்டித் திருத்துவார். அவர் சபை ஆராதனைகளில் வழங்கும் மறைத்தூதுக்கள், திருமறை உண்மைகளைச் சார்ந்ததாக இருக்கும். திருமறைச் சரித்திரங்கள் மூலமாகவும், இறை பக்தர்களின் வாழ்வில் நடைபெற்ற பல நிகழ்வுகள் மூலமாகவும், சபையாரை நேரிடையாக எச்சரித்தும், பக்தி விருத்தியில் பெருகும் வகையில் தைரியத்துடன் போதனை செய்வார். அவருடைய அருளுரைகள் பொதுவாக, மூன்று குறிப்புகள் கொண்டவைகளாக அமைந்திருக்கும், கேட்போர் இருதயங்களிலிருந்து அவ்விறை சத்தியங்கள் அகலாவண்ணம் நிலைத்திருந்து பயன் தரத்தக்கவாறு அவர் போதிப்பார். அவ்வப்போது சபையாரின் குற்றங்களையும், குறைகளையும் தைரியமாக இறை வசன ஆதாரத்துடன் எடுத்துச்சொல்லி எச்சரிக்கையில் கேட்போரும் சீர்ப்பட்டு, பக்திவிருத்தியடைந்து ஆசீர்வாதம் பெறுவர். சென்னை வேப்பேரியில் அமைந்துள்ள தூய பவுல் ஆலயத்தில் அவர் பத்து ஆண்டுகள் இறைபணியாற்றியுள்ளார். அந்நாட்களில் அச்சபையைச் சார்ந்த சிலர் அவருடைய பிரசங்கங்கள் மூலம் தாங்கள் அடைந்துள்ள பயனை எடுத்துக்கூறி மேற்கண்டவாறு சாட்சி கொடுத்துள்ளனர்.

இவர் இயற்றிய பல கீர்த்தனை நூல்களில் சில. டம்பாச்சாரி சரித்திரம், மரக்கல முனிவர் கவிதை, மச்ச முனிவர் கவிதை, கானாவூர் கல்யாணம் இவர் இயற்றிய கீர்த்தனைகள் மிக இனிமையாகவும் பொருள் மலிந்தும் இருக்கும்.

வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ்ப் புலவர் மூவர்

வரலாறு தொடரும் ...

